றாயவெண்ணீற்றினன்சோற்றுத்துறையுறைவார்சடைமேற்
பாயுமவெண்ணீாததிரட்கஙகையெம்மானுக்கழகியதே.

அண்டரமராகடைநதெழுநதோடியநஞ்சதனை
யுண்டமதனையொடுககவலலான்மிககவுமபர்கள்கோன்
றெண்டுபயில்கின்றசோற்றுததுறையுறைவார்சடைமே
லிணடைமதியமனறேவெம்பிரானுககழகியதே. (௮)

கடனமணிவணணனைகருதியநானமுகனறனறியா
விடமணிகணடமுடையவன்றனெனனேயாளுடையான்
சுடரணிநதாடியசோறறுததுறையுறைவாாசடைமேற்
படமணிநாகமனறேவெமபிரானுககழகியதே. (௯)

இலஙகைககிறைவனிருபதுதோளுமுடிநெரியக்
கலஙகவிரலினுலூன்றியவனைககருததழிதத
துலஙகனமழுவினன்சோறறுததுறையுறைவார்சடைமே
லிலஙகுமதியமனறேவெமபிரானுககழகியதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆசப்பதிகம் - அ௫.

திருவொற்றியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

செற்றுககளிற்றுரிகொளகின்றஞான்றுசெருவெண்கொம்பொன்
றிற்றுககிடநதுபோலுமிளம்பிறைபாம்பதனைச
சுற்றிககிடநததுகிமபுரிபோலசசடைமகக்கு
நெற்றிககணமறறதன்முதெதாககுமாலொற்றியூரனுககே. (௧)

சொல்லககருதியதொன்றுணடுகேட்கிற்றொண்டாயடைந்தா
ரல்லற்படக்கண்டுபினனெனகொடுத்தியலைகொண்முந்நீர்
மல்லற்றிரைச்சஙகநித்திலங்கொணடுவம்பக்கரைக்கே
யொல்லைத்திரைகொணர்ந்தெற்றொற்றியூருறையுத்தமனே. (௨)

பரவைவருதிரைநீர்க்கஙகைபாய்ந்துக்கபல்சடைமே
லரவமணிதருகொன்றையிளந்திஙகள்சூடியதோர்
குரவநறுமலர்கோங்கமணிந்துகுலாயவென்னி
யுரவுதிரைகொணர்ந்தெற்றொற்றியூருறையுத்தமனே. (௩)

[illegible]ன்கங்கர்டாங்காகவுடையதுதன்னடைந்தா
[illegible]டைதலையிற்பலிகொள்வதுந்தான்

[illegible]னைவாறுந்திருவொற்றியூருறைவாரவர்தாந்
[illegible]னகமேவந்துபோனகம்வேண்டியுழிதர்வரே. (௪)

773 வேலைக்கடனஞ்சமுண்டுவெள்ளேற்றொடும்வீற்றிருந்த
மாலைச்சடையார்க்குறைவிடமாவதுவாரிகுன்று
வாலைக்கரும்பொடுசெந்நெற்கழனியருகணைந்த
சோலைத்திருவொற்றியூரையெப்போதுந்தொழுமின்களே. (௫)

774 புற்றினில்வாழுமரவுக்குந்திங்கட்குங்கங்கையென்னுஞ்
சிற்றிடையாட்குஞ்செறிதருகண்ணிக்குஞ்சேரவிடமாம்
பெற்றுடையான்பெரும்பேச்சுடையானபிரியாதெனையாள்
விற்றுடையானொற்றியூருடையானறனவிரிசடையே. (௬)

775 இன்றரைக்கண்ணுடையாரெங்குமில்லையிமையமெனுங்
குன்றரைக்கண்ணன்குலமகட்பாவைக்குக்கூறிட்டநா
ளன்றரைக்கண்ணுங்கொடுத்துமையாளையும்பாகம்வைத்த
வொன்றரைக்கண்ணன்கண்டீரொற்றியூருறையுத்தமனே. (௭)

776 சுற்றிவண்டியாழ்செயுஞ்சோலையுங்காவுந்துதைந்திலங்கு
பெற்றிகண்டாலமற்றியாவருங்கொள்வாபிறரிடைநீ
யொற்றிகொண்டாயொற்றியூரையுங்கைவிட்டுறுமென்றெண்ணி
விற்றிகண்டாயமற்றிதுவொப்பதிலிடமவேதியனே. (௮)

777 சுற்றிக்கிடந்தொற்றியூரனென்சிந்தைபிரிவறியா
னெற்றித்திரிதந்துநீயென்னசெய்தியுலகமெல்லாம்
பற்றித்திரிந்துபலவொடுநாமென்றுகணகுழித்துக
கெற்றித்திருப்பதல்லாலென்னசெய்யுமித்தீவினையே. (௯)

778 அங்கட்கடுக்கைக்குமுல்லைப்புறவமுறுவல்செய்யும்
பைங்கட்டலைக்குச்சுடலைக்களரிப்பருமணிசேர்
கங்கைக்குவேலையரவுக்குப்புறுக்கலைநிரம்பாத்
திங்கட்குவானந்திருவொற்றியூர்திருமுடியே. (௧௦)

779 தருக்கினவாளரக்கன்முடிபத்திறப்பாதந்தன்னா
லொருக்கினவாறடியேனைப்பிறப்பறுத்தாளவல்லா
னெருக்கினவானவர்தானவர்கூடிக்கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய்கேனொற்றியூருறைபண்டங்கனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## திருப்பழனம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மேவித்துநின்றுவிளைந்தனவெந்துயர்துக்கமெல்லா
மாவித்துநின்றுகழிந்தனவல்லலவையறப்பான்
பாவித்தபாவனைநீயறிவாய்பழனத்தரசே
கூவித்துக்கொள்ளுந்தனையடியேனைக்குறிக்கொள்வதே. (௧)

சுற்றிநின்றார்புறங்காவலமரர்கடைத்தலையின்
மற்றுநின்றார்திருமாலொடுநான்முகன்வந்தடிக்கீழ்ப்
பற்றிநின்றார்பழனத்தரசேயுன்பணியறிவான்
உற்றுநின்றாரடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௨)

ஆடிநின்றாயண்டமேழுங்கடந்துபோய்மேலவையுங்
கூடிநின்றாய்குவிமென்முலையாளையுங்கொண்டுடனே
பாடிநின்றாய்பழனத்தரசேயங்கோர்பாண்மகிழ்ந்து
சூடிநின்றாயடியேனையஞ்சாமைக்குறிக்கொள்வதே. (௩)

எரித்துவிட்டாயம்பினாற்புரமூன்றுமுன்னேபடவு
முரித்துவிட்டாயுமையாணடுங்கவேழத்தைப்
பரித்துவிட்டாய்பழனத்தரசேகங்கைவார்சடைமேற்
றரித்துவிட்டாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௪)

முன்னியுமுன்னிமுளைத்தனமூவெயிலுமுடனே
மன்னியுமங்குமிருந்தனைமாயமனத்தவர்கள்
பன்னியநூலின்பரிசறிவாய்பழனத்தரசே
யுன்னியுமுன்னடியேனைக்குறிக்கொண்டருளுவதே (௫)

ஏய்ந்தறுத்தாயின்பனாயிருந்தேபடைத்தானறலைக்
காய்ந்தறுத்தாய்கண்ணினாலன்றுகாமனைக்காலனையும்
பாய்ந்தறுத்தாய்பழனத்தரசேயென்பழவினைநோ
யாய்ந்தறுத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௬)

மற்றுவைத்தாயங்கோர்மாதொருபாகமகிழ்ந்துடனே
யுற்றுவைத்தாயுமையாளொடுங்கூடும்பரிசவனே
பற்றிவைத்தாய்பழனத்தரசேயங்கோர்பாம்பொருகை
சுற்றிவைத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௭)

[illegible]யொன்றிநின்றுவிண்டாரையுமொள்ளழலாற்
[illegible]பொருதுயாருயிராவிசுமந்துகொண்டு

பரசினின்றுயபழனத்தரசேப்பணிசெய்பவாகட்
[illegible]ரகின்றுயடியேனைககுறிககொணடருளுவதே (அ

88 போகமவைததாயபுரிபுன்சடைமேலோாபுனலதனை
யாகமவைததாயமலையாாமடமஙகைமகிழநதுடனே
பாகமவைததாயபழனததரசேயுன பணியருளா
லாகமவைததாயடியேனைககுறிககொணடருளுவதே (கூ

89 அத்திருநதாயரககனமுடிவாயொடுதோணெரியக்
கெடுத்திருநதாயகிளாநதாாவலியைககிளையோடுடனே
படுததிருநதாயபழனததரசேபுலியினுரிதோ
லுடுததிருநதாயடியேனைககுறிககொணடருளுவதே. (கo

திருசசிறறமபலம.

ஆகபபதிகம். அஎ

---

திருபபூநதுருததி திருவிருததம

திருசசிறறமபலம

90 மாலினைமாலுறநினறுனமலைமகடனனுடைய
பாலனைபபானமதிசூடியைபபணபுணராாமதினமேற
போலனைபபோாவிடையேறியைபபூநதுருததிமகிழு
மாலனையாதிபுராணனைநாமடிபோறறுவதே (க)

91 மறியுடையானமழுவாளினனமாமலைமஙகைகேயாாபாற
குறியுடையானகுணமொனறறிநதாரிலலைகூறிலவன
பொறியுடைவாளரவததவனபூநதுருததியுறைய
மறிவுடையாதிபுராணனைநானடிபோறறுவதே. (உ)

92 மறுததவாமுயமதினமாயவோாவெஞசிலைகோததொாமயா
லறுததனையாலதனகீழனையால்விடமுணடதனைப்
பொறுததனைபபூதபபடையனைபபூநதுருத்தியுறைய
நிறததனைநீலமிடறறனையானடிபோற்றுவதே. (ங)

93 உருவினையூழிமுதலவனையோதிநிறைநதுநின்ற
திருவினைதசேசம்படைததனைசசெனறடைநதேனுடைய
பொருவினையெல்லாநதுரநதனைப்பூநதுருததியுறையுங்
கருவினைக்கணமூன்றுடையனையானடிபோற்றுவதே. (ச)

94 தககனறன்வேளவிதகர்த்தவன்சாமதுவன்றுகொண்
மிக்கனமுமமதில்வீயவோர்வெஞ்சிலைகோத்தொரம்பாற

புக்கனன் பொன்றிகழ்ந்தனனே தோரா பூந்துருத்தியுறையு
நந்தகனைநங்கள்பிரானறனைநானடிபோற்றுவதே. (௫)

அருகடைமாலையுந்தானுடையானழகாலமைந்த
வுருவுடைமங்கையுந்தனொருபாலுலகாயுநின்றான
பொருபடைவேலினனவிலினன பூந்துருத்தியுறையுந்
திருவுடைத்தேசமதியனையானடிபோற்றுவதே. (௬)

மன்றியுநின்றமதிலரக்காமாயவகைகெடுக்கக
கன்றியுநின்றுகடுஞ்சிலைவாங்கிக்கனலம்பினற
பொன்றியும்போகப்புரட்டினனே பூந்துருத்தியுறையு
மன்றியுஞ்செய்தபிரானறனையானடிபோற்றுவதே. (௭)

மின்னிறமிக்கவிடையுமைநங்கையோர் பாகமகிழ்ந்தா
னென்னிறமென்றமராபெரியாரின்னநாமறியார
பொன்னிறமிக்கசடையவன் பூந்துருத்தியுறையு
மென்னிறவெந்தைபிரானறனையானடிபோற்றுவதே. (௮)

அந்தியைநல்லமதியனையாரகுமறிவரிய
செந்தியைவாட்டுஞ்செம்பொன்னினைச்சென்றடைந்தேனுடைய
புந்தியைப்புக்கவறிவினைப் பூந்துருத்தியுறையு
நந்தியைநங்களபிரான்றனைநானடிபோற்றுவதே (௯)

பைக்கையும்பாந்திவிழிக்கையும்பாம்புசடையிடையே
வைக்கையுமவானிழிக்கங்கையுமங்கைநடுக்குறவே
மொய்க்கையரக்கனையூன்றினன பூந்துருத்தியுறையு
மிக்கநலவேதவிகிர்தனைநானடிபோற்றுவதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௮௮.

---

திருநெய்த்தானம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

பாரிடஞ்சாடியபல்லுயிர்வானமரர்க்கருளிக்
காரடைந்தகடல்வாயுமிழ்நஞ்சமுதாகவுண்டா
னூரடைந்திவ்வுலகிற்பலிகொள்வதுநாமறியோ
நீரடைந்தகரைநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௧)

தேய்ந்திலங்குஞ்சிறுவெண்மதியாயநின்றிருச்சடைமேற்
பாய்ந்தகங்கைப்புனல்புன்முகமாகியபயர்ந்தொலிப்ப

வாய்ந்திலங்கும்மழுவேலுடையாயடியேற்குரைநீ
யேய்ந்திளமங்கையுநீயுஞ்செய்ததானந்திருந்ததுவே. (௨)

கொன்றடைந்தாடிக்குமைத்திடுங்கூற்றமொன்றாமதனைமேற்
சென்றடைந்தாடிப்பொருந்துந்தேசமெல்லாமறியுந்
துன்றடைந்தாங்குளிர்பொழிற்காவிரியினகரைமேற்
சென்றடைந்தார்வினைதீர்க்குஞ்செய்ததானந்திருந்தவனே. (௩)

கொட்டிமுழவரவத்தொடுகோலம்பலவணிந்து
நட்டம்பலபயின்றுடுவாநாகமரைக்கசைத்துச்
சிட்டர்திரிபுரந்தீயெழச்செற்றசிலையுடையா
னிட்டமுமையொடிருந்தசெய்ததானந்திருந்தவனே. (௪)

கொய்யமலர்க்கொன்றைதுழாயவன்னிமத்தமுங்கூவிளமு
மெய்யமலர்வேய்ந்தவிரிசடைக்கற்றைவிண்ணோர்பெருமான்
மையமலர்நீலநிறக்கருங்கண்ணியோர்பான்மகிழ்ந்தா
னையமலரடிநிலைசெய்ததானந்திருந்தவனே. (௫)

பூந்தார்நறுங்கொன்றைமாலையைவாங்கிச்சடைக்கணிந்து
கூர்ந்தார்விடையினையேறிப்பல்பூதப்படைநடுவே
போந்தார்புறவிசைபாடவுமாடவுங்கேட்டருளிச்
சேர்ந்தாருமையவளோடுசெய்ததானந்திருந்தவனே. (௬)

புற்றினபாம்பணப்படுத்தபுலியுரித்தோலுடையன்
முற்றின்மூன்றுமதில்களைமூட்டியெரித்தறுத்தான்
சுற்றியபூதப்படையினன்சூலமழுவொருமான்
செற்றுநந்தீவினைதீர்க்குஞ்செய்ததானந்திருந்தவனே. (௭)

விரித்தசடையினன்விண்ணவர்கோனவிடமுண்டகண்ட
னுரித்தகரியுரிமூடியொன்றாமதின்மூன்றுடனே
யெரித்தசிலையினனீடழியாதெனையாண்டுகொண்ட
தரித்தவுமையவளோடுசெய்ததானந்திருந்தவனே. (௮)

தூங்கான்றுளங்கான்றுழாய்கொன்றைதுன்னியசெஞ்சடைமேல்
வாங்கானமதியமும்வாளரவுங்கங்கைதான்புனைந்தான்
றேங்கார்திரிபுரந்தீயெழச்செய்துதியக்கறுத்த
நீங்காருமையவளோடுசெய்த்தானந்திருந்தவனே (௯)

ஊட்டிநின்றான்பொருவாளிலமும்மதிற்றீயம்பினான்
மாட்டிநின்றான்றிரள்வெந்துவீழ்வும்வானவர்க்கும்

சேர்ந்தபுனற்சடைச்செல்வப்பிரான்றிருவேதிகுடிச்
சார்ந்தவயலணிதண்ணமுதையடைந்தாடுதுமே. (எ)

017 எரியுமழுவினனெண்ணியுமற்றொருவனறலையுட்
டிரியும்பலியினன்றேயமுநாடுமெல்லாமுடையான
விரியும்பொழிலணிசேறுதிகழதிருவேதிகுடி
யரியவமுதினையன்பர்களோடடைந்தாடுதுமே (அ)

018 மையணிகண்டன்மறைவிரிநாவனமதித்துகந்த
மெய்யணிநீற்றன விழுமியவெணமழுவாட்படையான்
செயயகமலமணங்கமழுந்திருவேதிகுடி
யையனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (கூ)

019 வருத்தனைவாளரக்கனமுடிதோளொடுபத்திறுத்த
பொருத்தனைபபொய்யாவருளனைபபூதப்படையுடைய
திருத்தனைததேவர்பிரானறிருவேதிகுடியுடைய
வருத்தனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (க௦)

திருச்சிற்றம்பலம.

இத்தலம சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - வேதபுரீசுவரர் - தேவியார் - மஙகையர்க்கரசியமமை

ஆகப்பதிகம் - கூ௦.

திருவையாறு - திருவிருத்தம.

திருச்சிற்றம்பலம.

020 குறுவித்தவாகுற்றநோயவினைகாட்டிககுறுவித்தநோ
யுறுவித்தவாவுற்றநோயவினைதீர்ப்பானுகந்தருளி
யறிவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
செறிவித்தவாதொண்டனேனைததனபொன்னடிக்கீழெனையே. (க)

021 கூர்வித்தவாகுற்றநோய்வினைகாட்டியுங்கூர்வித்தநோ
யூர்வித்தவாவுற்றநோயவினைதீர்ப்பானுகந்தருளி
யார்வித்தவாறடியேனையையாறனடிமைக்களே
சேர்வித்தவாதொண்டனேனைததனபொன்னடிக்கீழெனையே. (உ)

022 தாக்கினவாசலமேவினைகாட்டியுந்தண்டித்தநோய
நீக்கினவாநெடுநீரினின்றேற்றிநினைந்தருளி
யாக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
நோக்கினவாதொண்டனேனைததன்பொன்னடிக்கீழெனையே. (ங)

023 தருக்கினநான்றகவின்றியுமோடச்சலமதனு
னெருக்கினவாநெடுநீரினின்றேற்றிநினைந்தருளி

யுருககினவாறடியேனையையாறனடிமைககளே
பெருககினவாதொணடனேனைததனபொன்னடிக்கீழெனையே. ()

இழிவிததவாறிடடநோயவினைகாட்டியிடர்பபடுத்துக
கழிவிததவாகடடநோயவினைதீாபபானகலநதருளி
யழிவிததவாறடியேனையையாறனடிமைககளே
தொழுவிததவாதொணடனேனைததனபொனனடிககீழெனையே.()

இடைவிததவாறிடடநோயவினைகாடடியிடாப்படுதது
வுடைவிததவாறுறறநோயவினைதீாபபானுகநதருளி
யடைவிததவாறடியேனையையாறனடிமைககளே
தொடாவித்தவாதொணடனேனைததனபொனனடிக்கீழெனையே()

படககினவாபடநினறுபனனுருமபடககினநோ
யடககினவாறதுவனறியுநதீவினைபாவமெலலா
மடககினவாறடியேனையையாறனடிமைககளே
துடககினவாதொணடனேனைததனபொனனடிககீழெனையே. (எ)

மறபபிததவாவலலைநோயவினைகாடடிமறபபிததநோய
துறபபிததவாதுக்கநோயவினைதீாபபானுகநதருளி
யிறபபிததவாறடியேனையையாறனடிமைககளே
சிறபபிததவாதொணடனேனைததனபொனனடிககீழெனையே. (அ)

துயககினவாதுககநோயவினைகாட்டிததுயககியநோ
யியககினவாறிடடநோயவினைதீாபபாணிசைநதருளி
யுயககினவாறடியேனையையாறனடிமைககளே
மயககினவாதொணடனேனைததனபொனனடிககீழெனையே. (௯)

கறுததுமிடடாாகணடஙகஙகைசடைமேறகரநதருளி
யிறுததுமிட்டாரிலஙகைககிறைதனனையிருபதுதோ
ளறுததுமிடடாரடியேனையையாறனடிமைககளே
பொறுத்துமிடடாாதொணடனேனைததனபொன்னடிககீழெனை[யே. (௧௦)

திருசசிறறமபலம.

ஆகப்பதிகம . ௬௩.

திருவையாறு - திருவிருததம.

திருசசிறறமபலம

சிநதிப்பரியனசிநதிப்பவாககுசசிறநதுசெநதேன்
முந்திப்பொழிவனமுததிகொடுபபனமொய்த்திருண்டு

பநதிததுநினறபழவினைதீரபபனபாமபுசுறறி
யநதிபபிறையணிநதாடுமையாறனடிததலமே (க)

இழிததனவேழேழபிறபபுமறுததனவெனமனததே
பொழிததனபோரெழிறகூறறையுதைததனபோறறவாககாய
கிழிததனதககனகிளரொளிவேளவிகைகீழமுனைசெனறு
அழிததனவாறஙகமானவையாறனடிததலமே (உ)

மணிநிறமொபபனபொனனிறமனனினமினனிலவாயக
கணிநிறமனனகயிலைபபொருபபனகாதலசெயத
துணிவனசீலததராகிததொடாநதுவிடாததொணடாக
கணியனசேயனதேவாககையாறனடிததலமே (ங)

இருடருதுனபபடலமறைபபமெயஞஞானமெனனும
பொருடருகணணிழநதுணபொருளநாடிபபுகலிழநத
குருடருநதமமைபரவககொடுநாககருழிநின
றருடருகைககொடுதேறறுமையாறனடிததலமே (ச)

எழுவாயிறுவாயிலாதனவெஙகளபிணிதவிாதது
வழுவாமருததுவமாவனமாநரககுழிவாய
விழுவாரவாதமமைவீழபபனமீடபனமிககவனபோ
டழுவாாககமுதஙகளாவனவையாறனடிததலமே. (ரு)

துனபககடலிடைததோணிததொழிலபூணடதொணடாதமமை
யினபககரைமுகநதேறறுநதிறததனமாறறயலே
பொனபட்டொழுகபபொருநதொளிசெயயுமபபொயபொருநதா
வனபாககணியனகாணகவையாறனடிததலமே (சா)

களிததுககலநததோாகாதறகசிவொடுகாவிரிவாயக
குளிததுததொழுதுமுனனினறவிபபததரைககோதிலசெநதேன
றெளிததுசசுவையமுதூட்டியமராகளசூழிருபப
வளிததுபபெருஞசெலவமாககுமையாறனடிததலமே (எ)

திருததிககருததினைசசெவவேநிறுததிசசெறுததுடலை
வருததிககடிமலாவாளெடுததோசசிமருஙகுசெனறு
விருததிககுழககவலலோாகடகுவிணபட்டிகையிடுமா
லருததிததருநதவாோததுமையாறனடிததலமே (அ)

பாடுமபறணடையுமொநதையுமாாபபபபரநதுபலபேய
கூடிமுழவககுவிகவிழகொட்டககுறுநரிக

ணீடுங்குழல்செய்யவாய்மெல்லியனிணப்பிணக்காட்
டாடுந்திருவடிகாண்கவையாறனடித்தலமே. (கூ)

நின்போலமரர்கணீண்முடிசாய்த்துநிமிர்த்துக்குத்த
பைம்போதுழக்கிப்பவளந்தழைப்பனபாங்கறியா
வென்போலிகள்பறித்திட்டவிலையுமுழுகையுமெல்லா
மம்போதெனக்கொள்ளுமையனையாறனடித்தலமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - கூஉ.

---

திருவையாறு - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

மலையார்மடந்தைமனத்தனவானோர்மகுடமன்னி
நிலையாயிருப்பனநின்றோர்மதிப்பனநீணிலத்துப்
புலையாடுபுன்மைதவிர்ப்பனபொன்னுலகம்மளிக்கும்
அலையார்புனற்பொன்னிசூழ்ந்தவையாறனடித்தலமே. (க)

பொலம்புண்டரீகப்புதுமலர்போல்வனபோற்றியென்பார்
புலம்பும்பொழுதும்புணர்துணையாவனபொன்னனைய
சிலம்புஞ்செறிபாடகமுஞ்செழுங்கிண்கிணித்திரளு
மலம்புந்திருவடிகாண்கவையாறனடித்தலமே. (உ)

உற்றாரிலாதார்க்குறுதுணையாவனவோதிநன்னூல்
கற்றார்பரவப்பெருமையுடையனகாதல்செய்யக்
கிற்பார்தமக்குக்கிளரொளிவானகந்தான்கொடுக்கு
மற்றார்க்கரும்பொருள்காண்கவையாறனடித்தலமே. (ங)

வானைக்கடந்தண்டத்தப்பான்மதிப்பனமந்திரிப்பா
ரூனைக்கழித்துய்யக்கொண்டருள்செய்வனவுத்தமமாக்கு
ஞானச்சுடராய்நடுவேயுதிப்பனநங்கையஞ்ச
வானையுரித்தனகாண்கவையாறனடித்தலமே (ச)

மாதிரமானிலமாவனவானவர்மாமுகட்டின
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெந்நமனார்
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொண்டுபட்டார்க்
காதரமாவனகாண்கவையாறனடித்தலமே. (ரு)

பேணித்தொழுமவர்பொன்னுலகாளப்பிறங்கருளா
லேணிப்படிநெறியிட்டுக்கொடுத்திமையோர்முடிமேன்
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவயிரமன்னி
யாணிக்கனகமுமொக்குமையாறனடித்தலமே. (சு)

ஓதியஞானமுஞானபபொருளுமொலிசிறநத
வேதியாவேதமுமவேள்வியுமாவனவிணணுமண்ணுஞ
சோதியுஞசெஞசுடர்ஞாயிறுமொபபனதாமதியோ
டாதியுமநதமுமானவையாறனடிததலமே. (எ)

சுணங்குமுகத்துததுணைமுலைபபாவைசுருமபொடுவண
டணஙகுஙகுழலியணியாாவளைககரஙகூபபிநினறு
வணஙகுமபொழுதுமவருடுமபொழுதுமவணகாநதளொணபோ
தணஙகுமரவிநதமொககுமையாறனடிததலமே. (அ)

சூழலாாதுயாவெயிறசுட்டிடுமபோதடிததொணடாதுனனு
நிழலாவனவென்றுநீஙகாபபிறவிநிலைகெடுததுக
கழலாவினைகளகழறறுவகாலவனஙகடநத
வழலாரொளியனகாணகவையாறனடிததலமே. (௯)

வலியானறலைபததுமவாயவிடடலறவரையடாதது
மெலியாவலியுடைககூறறையுதைததுவிணணோாகணமுனனே
பலிசேர்படுகடைபபாாததுபபனனாளுமபலரிகழ
வலியாநிலைநிறகுமையனையாறனடிததலமே. (௰)

திருசசிறறமபலம.

ஆகபபதிகம - ௩௧.

திருககணடியூா - திருவிருததம.

திருசசிறறமபலம.

வானவாதானவாவைகனமலாகொணாநதிட்டிறைஞசித
தானவாமாலபிரமனறியாததகைமையின
ஞனவனாதிபுராணனனறோடியபனறியெயத
கானவனைககணடியூரணடவாணாதொழுகினறதே. (க)

வானமதியமும்வாளரவும்புனலோடுசடைத
தானமதுவெனவைததுழலவான்றழலபோலுருவன
கானமறியொன்றுகையுடையான்கண்டியூாிருநத
வூனமில்வேதமுடையானைநாமடியுளகுதுமே. (௨)

பண்டங்கறுத்ததோாகையுடையானபணடதானறலையை
யுணடஙகறுததததுமொரோடுகாடடைவதானறியுங
கண்டஙகறுததமிடறுடையானகண்டியூாிருநத
தொண்டாபிரானைககணடரணடவாணாதொழுகினறதே. (௩)

முடியின்முற்றாதொன்றிலலையெலலாமுடன்றானுடையான்
கொடியமுற்றவிடையேறியோாகூற்றொருபாலுடையான்

கடியமுற்றவ்வினைநோய்களைவான கண்டியூரிருந்தா
னடியுமுறரா தொண்டரில்லைகண்டீரண்டவானவரே (௪)

பற்றியோரானையுரித்தபிரான்பவளத்திரள்போன்
முற்றுமணிந்ததோர்நீறுடையான்முன்னமேகொடுத்த
கற்றங்குடையவன்றன்றியானைகண்டியூரிருந்த
குற்றமில்வேதமுடையானையாமண்டர்கூறுவதே (௫)

போர்ப்பனையானையுரித்தபிரான்பொறிவாயரவுஞ்
சேர்ப்பதுவானதிங்கட்சூழலகமமிதனைக்
காப்பதுகாரணமாகக்கொண்டான்கண்டியூரிருந்த
கூர்ப்புடையொள்வாண்மழுவனையாமண்டர்கூறுவதே. (௬)

அட்டதுகாலனையாய்ந்ததுவேதமாறங்கமன்று
சுட்டதுகாமனைக்கண்ணதனாலேதொடர்ந்தெரியக்
கட்டவைமூன்றுமெரித்தபிரான்கண்டியூரிருந்த
குட்டமுன்வேதப்படையனையாமண்டர்கூறுவதே. (௭)

அட்டுமொலிநீரணிமதியுமலரானவெல்லாம்
இட்டமபொதியுஞ்சடைமுடியானிணைமாலையங்கைக்
கட்டுமரவதுதானுடையான்கண்டியூரிருந்த
கொட்டுமபறையுடைக்கூத்தனையாமண்டர்கூறுவதே. (௮)

மாயந்தன்றீவினைமங்கினோய்கண்மறுகிவிழத்
தேயந்தன்பாவஞ்செறுக்ககில்லாநமமைச்செற்றங்கைக்
காயந்தபிரான்கண்டியூரெம்பிரானங்கமாறினையும்
ஆய்ந்தபிரானல்லனோவடியேனையாட்கொண்டவனே. (௯)

மண்டிமலையையெடுத்துமத்தாகியவாசுகியைத்
தண்டியமராகடைந்தகடல்விடங்கண்டருளி
யுண்டபிரானஞ்சொளித்தபிரானஞ்சியோடிநண்ணக்
கண்டபிரானல்லனோகண்டியூரண்டவானவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

இத்தலம் - சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - வீரட்டேசுவரர். தேவியார்பெயர் - மங்கைநாயகியம்மை.

---

ஆகப்பதிகம் - ௯௪

திருப்பாதிரிப்புலியூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான்மனத்துள்ளிருக்க

ஏன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே. (க)

பற்றாய்நினைந்திடப்போதுநெஞ்சேயிந்தப்பாரைமுற்றுஞ்
சுற்றாயலைகடன்மூடினுங்கண்டேன்புகலநமக்கு
உற்றானுமையவட்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்
முற்றாமுளைமதிக்கண்ணியினான்றன பொற்கழலே. (உ)

விடையான்விரும்பியென்னுள்ளத்திருந்தானினிநமக்கிங்
கடையாவவலமருவினைசாராநமனையஞ்சோம்
புடையார்கமலத்தயனைப்போலப்பாதிரிப்புலியூ
ருடையானடியாரடியடியோங்கட்கரியதுண்டே. (௩)

மாயமெலாமுற்றவிட்டிருணீங்கமலைமகட்கே
நேயநிலாவவிருந்தானவன்றன்றிருவடிக்கே
தேயமெலாநின்றிறைஞ்சுந்திருப்பாதிரிப்புலியூர்
மேயநல்லான்மலர்ப்பாதமென்சிந்தையுணின்றனவே. (௪)

வைத்தபொருணமக்காமென்றுசொல்லிமனத்தடைத்துச்
சித்தமொருக்கிச்சிவாயநமவென்றிருக்கினல்லால்
மொய்த்தகதிர்மதிபோல்வாரவர்பாதிரிப்புலியூர்
அத்தனருள்பெறலாமோவறிவிலாப்பேதைநெஞ்சே. (௫)

கருவாய்க்கிடந்துன்கழலேநினையுங்கருத்துடையேன்
உருவாய்த்தெரிந்துன்றனாமம்பயின்றேனுனதருளால்
திருவாய்ப்பொலியச்சிவாயநமவென்றுநீறணிந்தேன்
றருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரரனே. (௬)

எண்ணாதமரரிரக்கப்பரவையுணஞ்சையுண்டாய்
திண்ணாரசுரர்திரிபுரந்தீயெழச்செற்றவனே
பண்ணார்ந்தமைந்தபொருள்கள்பயில்பாதிரிப்புலியூர்க்
கண்ணார்நுதலாய்கழனங்கருத்திலுடையனவே. (௭)

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்ததீவண்ணனே. (௮)

மண்பாதலம்புக்குமால்கடன்மூடிமற்றேழுலகும்
விண்பாலிசைகெட்டிருசுடர்வீழினுமஞ்சனெஞ்சே

திண்பானமக்கொன்றுகண்டோந்திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவுநெற்றிக்கடவுட்சுடரான்கழலிணையே. (௯)

திருந்தாவமணர்தந்தீநெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூர
இருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே (௰)

திருச்சிற்றம்பலம்

இந்தத்தலம் - நடுநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - தோன்றாத்துணையீசுவரர். தேவியார் - தோகையம்பிகையம்மை.

ஆகப்பதிகம் - கங.

திருவீழிமிழலை - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்

வானசொட்டச்சொட்டநின்றட்டுமவளர்மதியோடயலே
தேன்சொட்டச்சொட்டநின்றட்டுந்திருக்கொன்றைசென்னிவைத்தீர்
மான்பெட்டைநோக்கிமணாளீர்மணிநீர்மிழலையுள்ளீர்
நான்சட்டவும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (க)

அந்தமுமாதியுமாகிநின்றீரண்டமெண்டிசைக்கும்
பந்தமும்வீடும்பரப்புகின்றீர்பசுவேறுகந்தீர்
வெந்தழலோம்புமிழலையுள்ளீரென்னைத்தென்றிசைக்கே
யுந்திடும்போதுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (உ)

அலைக்கின்றநீர்நிலங்காற்றனலம்பரமாகிநின்றீர்
கலைக்கன்றுசேருங்கரத்தீர்கலைப்பொருளாகிநின்றீர்
விலக்கின்றிநல்குமிழலையுள்ளீர்மெய்யிற்கையொடுகால்
குலைக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௩)

தீத்தொழிலான்றலைதீயிலிட்டுச்செய்தவேள்விசெற்றீர்
பேய்த்தொழிலாட்டியைப்பெற்றுடையீர்பிடித்துத்திரியும்
வேய்த்தொழிலாளர்மிழலையுள்ளீர்விக்கியஞ்செழுத்தும்
ஓத்தொழிந்தும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௪)

தோட்பட்டநாகமுஞ்சூலமுஞ்சுற்றியும்பத்திமையான
மேற்பட்டவந்தணர்வீழியுமென்னையும்வேறுடையீர்
நாட்பட்டுவந்துபிறந்தேனிறக்கநமன்றமர்தங்
கோட்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௫)

கண்டியிற்பட்டகழுத்துடையீர்கரிக்காட்டிலிட்ட
பண்டியிற்பட்டபரிகலத்தீர்பதிவீழிகொண்டீர

உண்டியிற்பட்டினிநோயிலுறக்கத்திலுமையைவர்
கொண்டியிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௬)

1076 தோற்றங்கண்டானசிரமொன்றுகொண்டீர்தூயவெள்ளெருதொ
ரேற்றங்கொண்டீரெழில்வீழிமிழலையிருக்கைகொண்டீர் [ன
சீற்றங்கொண்டென்மேற்சிவந்ததோர்பாசத்தால்வீசியவெங்
கூற்றங்கண்டுமைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௭)

1077 சூழிப்பட்டகங்கையுந்திங்களுஞ்சூடிச்சொக்கம்பயின்றீர்
பழிப்பட்டபாம்பரைப்பற்றுடையீர்படாதிப்பருக
விழிப்பட்டகாமனைவிட்டீர்மிழலையுள்ளீர்பிறவிச்
சுழிப்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௮)

1078 பிள்ளையிற்பட்டபிறைமுடியீர்மறையோதவல்லீர்
வெள்ளையிற்பட்டதோர்நீற்றீர்விரிநீர்மிழலையுள்ளீர்
நள்ளையிற்பட்டைவர்நக்கரைப்பிக்கநயனற்றமாற்றங்
கொள்ளையிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௯)

1079 கறுக்கொண்டரக்கன்கயிலையைப்பற்றியகையுமெய்யு
நெறுக்கெனற்றிறச்செற்றசேவடியாற்கூற்றைநீறுசெய்தீர்
வெறிக்கொன்றைமாலைமுடியீர்விரிநீர்மிழலையுள்ளீர்
இறக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௰)

திருச்சிற்றம்பலம்

இந்தத்தலம் சோழநாட்டிலுள்ளது.

சுவாமியார் பெயர் - வீழியழகர் - தேவியார் - சுந்தரகுசாம்பிகையம்மை.

---

ஆகப்பதிகம் - ௬௬.

திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

1080 கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடின்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧)

81 காய்ந்தாயனங்கனுடலம்பொடிபடக்காலனைமுன்
பாய்ந்தாயுயிர்செகப்பாதம்பணிவார்தம்பல்பிறவி
யாய்ந்தாய்த்தறுப்பாயடியேற்கருளாயுன்னன்பர்சிந்தை
சேர்ந்தாயதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௨)

82 பொத்தார்க்குரம்பையிற்புக்குநைவர்நாளும்புகலழிப்ப
மத்தார்தயிர்போன்மறுகுமென்சிந்தைமறுக்கொழிவி

பத்தாவடியேனடைக்கலங்கண்டாயமரர்கடஞ்
சித்தாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௩)

நில்லாக்குரம்பைநிலையாக்கருதியிந்நீணிலத்தொன்
றல்லாக்குழிவீழ்ந்தயர்வுறுவேனைவந்தாண்டுகொண்ட
வில்லேர்புருவத்துமையாள்கணவாவிடிற்கெடுவேன
செல்வாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௪)

கருவுற்றிருந்துன்கழலேநினைந்தேன்கருப்புவியிற்
றெருவிற்புகுந்தேன்றிகைத்தடியேன்றனைத்திகைப்பொழிவி
யுருவிற்றிகழுமுமையாள்கணவாவிடிற்கெடுவேன்
றிருவிற்பொலிசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௫)

வெம்மைநமன்றமர்மிக்குவிரவிவிழிப்பதன்முன்
இம்மையுன்றாளென்றன்னெஞ்சத்தெழுதிவையீங்கிகழி
லம்மையடியேற்கருளுதியென்பதிங்காரறிவார்
செம்மைதருசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௬)

விட்டார்புரங்களொருநொடிவேவவோர்வெங்கணையாற்
சுட்டாயென்பாசத்தொடர்பறுத்தாண்டுகொள்டும்பியம்பு
மட்டார்குழலிமலைமகள்பூசைமகிழ்ந்தருளுஞ்
சிட்டாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௭)

இகழ்ந்தவன்வேள்வியழித்திட்டிமையோர்பொறையிரப்ப
நிகழ்ந்திடவன்றேவிசயமுங்கொண்டதுநீலகண்டா
புகழ்ந்தவடியேன்றன்புன்மைகடீரப்புரிந்துநல்காய்
திகழ்ந்ததிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௮)

தக்கார்வமெய்திச்சமண்டவிர்ந்துன்றன்சரண்புகுந்தேன்
எக்காதலெப்பயனுன்றிறமல்லாலெனக்குளதே
மிக்கார்தில்லையுள்விருப்பாமிகவடியேருவென்று
திக்காதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௯)

பொறித்தேரரக்கனைப்பொருட்படுப்புறுத்தவன்பொன்முடிதோள்
இறுத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாயதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இந்தத்தலம் - சோழநாட்டிலுள்ளது.

சுவாமியார்பெயர் - சிவக்கொழுந்தீசுவரர் - தேவியார்பெயர் - பெரியநாயகியம்மை.

ஆகப்பதிகம் - ௯௦.

---

திருநல்லூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம

5090 அட்டுமினில்பலியென்றென்றகங்கடைதோறும்வந்து
மட்டவிழுங்குழலார்வளைகொள்ளுமவகையெனகொலோ
கொட்டியபாணியெடுத்திட்டபாதமுங்கோளரவு
நட்டநின்றாடியநாதர்நல்லூரிடங்கொண்டவரே. (க)

5091 பெண்ணிட்டம்பண்டையதன்றிவைபெய்பலிக்கென்றுழல்வார்
நண்ணிட்டுவந்துமனைபுகுந்தாருநல்லூரகத்தே
பண்ணிட்டபாடலராடலராய்ப்பற்றிநோக்கிநின்று
கண்ணிட்டுப்போயிற்றுக்காரணமுண்டுகொல்கண்டோ. (உ)

5092 படவேரரவல்குற்பாவைநல்லீர்பகலேயொருவர்
இடுவாரிடைப்பலிகொள்பவர்போலவந்தில்புகுந்து
நடவாரடிகணடம்பயின்றாடியகூத்தர்கொலோ
வடபாற்கயிலையுந்தென்பானல்லூருந்தம்வாழ்பதியே. (ங)

5093 செஞ்சுடர்ச்சோதிப்பவளத்திரடிகழ்முத்தனைய
நஞ்சணிகண்டனல்லூருறைநம்பனைநானொருகால்
துஞ்சிடைக்கண்டுகனவினிற்றலைத்தொழுதேற்கவன்று
நெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநின்றனனே. (ச)

5094 வெண்மதிசூடிவிளங்கநின்றானைவிண்ணோர்கடொழ
நண்ணிலயத்தொடுபாடலறாதநல்லூரகத்தே
திண்ணிலையங்கொடுநின்றானைத்திரிபுரமூன்றெரித்தான
கண்ணுறுநெஞ்சத்தகத்துமுளகழற்சேவடியே. (ரு)

5095 தேற்றப்படத்திருநல்லூரகத்தேசிவனிருந்தான்
தோற்றப்படச்சென்றுகண்டுகொள்ளார்தொண்டர்துன்மதியால்
ஆற்றிற்கெடுத்துக்குளத்தினிற்றேடியவாதனைப்போற்
காற்றிற்கெடுத்துலகெல்லாந்திரிதருவர்காண்பதற்கே. (சா)

5096 நாட்கொண்டதாமரைப்பூத்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கோர்வாணிகனை
யாட்கொண்டவார்த்தையுரைக்குமன்றோவிவ்வகலிடமே. (எ)

5097 அறைமல்குபைங்கழலார்ப்பநின்றணியார்சடைமேல
நறைமல்குகொன்றையந்தாருடையானுநல்லூரகத்தே

பறைமலங்குபாடலனாடலனாகிப்பரிசழிந்தான்
பிறைமலங்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (அ)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்கும்
துன்னியதொண்டர்களின்னிசைபாடித்தொழுதெழுவார்க
கன்னியராமுங்கனவிடையுமணியகாதலனை
யன்னியரற்றவாங்கண்ணேயருணல்கென்பரோ. (கூ)

திருவமாதாமரைசீரவளரசெங்கழுநீர்கொண்ணயதல
குருவமாகோங்கங்குராமகிழ்செண்பகங்கொன்றைவன்னி
மருவமாநீள்கொடிமாடமலிமறையோர்கள்நல்லூா
உருவமாபாகத்தன்மையவள்பாகனையுள்குதுமே. (ய)

செல்வோகொடியணிசிவனபெருங்கோயில்சிவபுரமும்
வலலேனபுகவுமதில்சூழிலங்கையாகாவலனைக
கல்லாமுடியொடுதோளிறச்செற்றகழலடியான
நல்லூரிருந்தபிரானல்லனேநமையாளவனே. (யக)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - கஅ.

திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அங்திவட்டத்திங்கட்கண்ணியனையாறமாந்துவைதேவ
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனே
சிந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலாந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (க)

பாடக்கால்கழற்காலப்பருதிக்கதிருக்கவந்தி
நாடக்கானங்கைமுன்செங்கணேனத்தில்பின்னடந்த
காடக்காலகணங்கைதொழுங்காலெங்கணையனறகா
லாடக்காலரிமானேறவலவனையாறனையே. (உ)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் கூ.

திருவேகம்பம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

ஓதுவித்தாயமுன்னறவுரைகாட்டியமணரொடே
காதுவித்தாயகட்டநோயபிணிதீர்த்தாய்கலந்தருளிப
போதுவித்தாயினபணிபிழைக்கிறபுளியமவரால
மோதுவிப்பாயுகப்பாயமுனிவாய்கச்சியேகம்பனே. (க)

5/104 எத்தைக்கொண்டெத்தகையேழையமணொடிசைவித்தெனைக்
கொத்தைக்குமூங்கர்வழிகாட்டுவித்தென்னைக்கோகுசெய்தாய்
முத்திற்றிரளும்பளிங்கினிற்சோதியுமொய்பவளத்
தொத்தினையேய்க்கும்படியாய்பொழிற்கச்சியேகம்பனே. (௨)

5/05 மெய்யம்புகோத்தவிசயனோடன்றொருவேடனாகிப்
பொய்யம்பெய்தாவருளிச்செய்தாய்புரமூன்றெரியக்
கையம்பெய்தாயுன்கழலடிபோற்றக்கயவர்நெஞ்சிற்
குய்யம்பெய்தாய்கொடிமாமதில்சூழ்கச்சியேகம்பனே. (௩)

/06 ஊறிக்கொண்டிருந்துசெந்தாமரையாயிரம்வைகல்வைகல்
ஏறிப்படவிண்டைபுனைகின்றமாலைநிறையழிப்பான்
கறைக்கண்டநீயொருபூக்குறைவித்துக்கண்சூல்விப்பதே
பிறைத்துண்டவார்சடையாய்பெருங்காஞ்சியெம்பிஞ்ஞகனே. (௪)

5/07 உரைக்குங்கழிந்திங்குணர்வரியானுள்குவார்வினையைக்
கரைக்குமெனக்கைதொழுவதல்லாற்கதிரோர்களெல்லாம்
விரைக்கொண்மலரவன்மாலெண்வசுக்களேகாதசர்க
ளிரைக்குமமிர்தாகக்கறியவொணாதனேகம்பனே. (௫)

/08 கருவுற்றநாண்முதலாகவுன்பாதமேகாண்பதற்கு
உருகிற்றென்னுள்ளமுநானுங்கிடந்தலந்தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூராய்திருவாலவாயாய்திருவாரூராய்
ஒருபற்றிலாமையுங்கண்டிரங்காய்கச்சியேகம்பனே. (௬)

/09 அரியயனிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாம்
உரியநின்கொற்றக்கடைத்தலையாருணங்காக்கிடந்தார்
புரிதருபுன்சடைப்போகமுனிவர்புலம்புகின்றார்
எரிதருசெஞ்சடையேகம்பவென்னோதிருக்குறிப்பே. (௭)

110 பாம்பரைச்சேர்த்திப்படருஞ்சடைமுடிப்பால்வண்ணனே
கூம்பலைச்செய்தகரதலத்தன்பர்கள்கூடிப்பன்னாள்
சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பார்கட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. (௮)

111 ஏன்றுகொண்டாயென்னையெம்பெருமானினியல்லமென்னிற்
சான்றுகண்டாயிவ்வுலகமெல்லாந்தனியேனென்றென்னை
யூன்றிநின்றாரைவர்க்கொற்றிவைத்தாய்பின்னையொற்றியெல்லாஞ்
சோன்றுகொண்டாய்கச்சியேகம்பமேயசுடர்வண்ணனே. (௯)

உந்திநின் றாருன்ற னோலக்கச் சூளைகள் வாய்தல்பற்றித்
துன்றிநின் றார்தொல்லை வானவரீட்டம் பணியறிவான்
வந்துநின் றாரயனுந் திருமாலு மதிட்கச்சியாய்
இந்தநின் றோமினி யெங்ஙனே மோவந் திறைஞ்சுவதே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - க௦௦.

---

திருஇன்னம்பர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மன்னு மலைமகள் கையால் வருடின மாமறைகள்
சொன்ன துறைதொறுந் தூப்பொருளாயின தூக்கமலத்
தன்ன வடிவின வன்புடைத் தொண்டர்க் கமுதருத்தி
இன்னல் களைவன வின்னம்பரான்ற னிணையடியே. (௧)

பைதற் பிணக்குழைக் காளிவெங் கோபம் பங்கப்படுப்பான்
செய்தற் கரியதிரு நடஞ்செய்தன சீர்மறையோன்
உய்தற் பொருட்டுவெங் கூற்றை யுதைத்தன வும்பர்க்கெல்லாம்
எய்தற் கரியன வின்னம்பரான்ற னிணையடியே. (௨)

சுணங்கு நின்றார்கொங்கை யாளுமை சூடின தூமலரால்
வணங்கி நின்றும்பர்கள் வாழ்த்தின மன்னு மறைகட்டமிழ்ப்
பிணங்கி நின்றின்னன வென்றறியாதன பேய்க்கணத்தோ
டிணங்கி நின்றாடின வின்னம்பரான்ற னிணையடியே. (௩)

ஆறொன் றியசம யங்களின் அவ்வவர்க் கப்பொருள்கள்
வேறொன் றிலாதன விண்ணோர் மதிப்பன மிக்குப்பன்
மாறொன் றிலாதன மண்ணொடு விண்ணகம் மாய்ந்திடினும்
ஈறொன் றிலாதன வின்னம்பரான்ற னிணையடியே. (௪)

அரக்கர்தம் முப்புரம் அம்பொன்றி னாலடங் கியினவாய்க்
கரக்க முனைவதிக் கதோமிசைநின் றனகட்டுருவம்
பரக்கவெங் கானிடை வேடுருவாயின பல்பதிதோ
றிரக்க நடந்தன வின்னம்பரான்ற னிணையடியே. (௫)

ஈண்டுங் கிளர்ந்தும்பொற் கேழன்முன் றேடின கேட்பட்டா
வாண்டும் பலபல வூழியுமாயின வாரணத்தின்
வேண்டும் பொருள்கள் விளங்கநின் றாடின மேவுஞ்சிலம்
பீண்டுங் கழலின வின்னம்பரான்ற னிணையடியே. (௬)

தேசனையாரூரத் திருமூலத்தானனைச் சிந்தைசெய்து
பூசனைப் பூசுராதொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (௪)

அருந்தும் பொழுதுரையாடா வமணர் திறமகன்று
வருந்தி நினைந்தரனே யென்று வாழ்த்துவேற் குண்டுகொல்லோ
திருந்திய மாமதிலாரூர்த் திருமூலத்தானனுக்குப்
பொருந்துந் தவமுடைத் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய [மே. (௫)

வீங்கிய தோள்களுந் தாள்களுமாய் நின்று வெற்றரையே
மூங்கைகள் போலுண்ணுமூடர் முன்னே நமக்குண்டுகொல்லோ
தேங்கமழ் சோலைத் தென்னாரூர்த் திருமூலத்தானன் செய்ய
பூங்கழலானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. (௬)

பண்ணிய சாத்திரப் பேய்கள் பறிதலைக் குண்டரைவிட்
டெண்ணிலாப் புகழீசனருள் பெற்றேற் குமுண்டுகொல்லோ
திண்ணிய மாமதிலாரூர்த் திருமூலத்தானனெங்கள்
புண்ணியன் றன்னடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

கரப்பர்கண் மெய்யைத் தலைபறிக்கச் சுகமென்னுங் குண்டர்
உரைப்பனகேளாதிங் குய்யப்போந்தேனுக்கு முண்டுகொல்லோ
திருப்பொலியாரூர்த் திருமூலத்தானன் றிருக்கயிலைப்
பொருப்பன் விருப்பமர் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணிய [மே. (௮)

கையிலிடு சோறு நின்றுண்ணுங் காதலமணரைவிட்
டுய்யுநெறி கண்டிங் குய்யப்போந்தேனுக்கு முண்டுகொல்லோ
ஐயனணி வயலாரூர்த் திருமூலத்தானனுக்குப்
பொய்யன்பிலா வடித்தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே.

குற்றமுடைய வமணர் திறமது கையகன்றிட்
டுற்ற கருமஞ்செய் துய்யப்போந்தேனுக்கு முண்டுகொல்லோ
மற்பொலி தோளானிராவணன் றன்வலி வாட்டுவித்த
பொற்கழலானடித் தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே. ()

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் = ௬௦

திருஆரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வெம்பினைப் பேசிவிடக்கினையோம்பி வினைபெருக்கித்
தூம்பினைத் தூர்த்தங்கோர் சுற்றந் துணையென் றிருத்திர் தொண்டீர்
ஆம்பலம் பூம்பொய்கையாரூரமர்ந்தானடி நிழற்கீழ்ச்
சாம்பலைப் பூசிச் சலமின்றித் தொண்டுபட் டுய்ம்மின்களே. (௧

34 ஆராய்ந்தடித்தொண்டராணிப்பொன்னாரூரகத்தடக்கிப்
பாரூர்பரிப்பத்தம்பங்குனியுத்திரம்பாற்படுத்தா
னாரூர்நறுமலர்நாதனடித்தொண்டனம்பிநந்தி
நீரார்திருவிளக்கிட்டமைநீணாடறியுமன்றே. (உ)

35 பூம்படிமக்கலம்பொற்படிமக்கலமென்றிவற்று
ளாம்படிமக்கலமாகிலுமாரூரினிதயாநதரா
தாம்படிமக்கலம்வேண்டுவரோதமிழ்மாலைகளா
லாம்படிமக்கலஞ்செய்தத்தொழுதுய்யமடநெஞ்சமே. (ங)

36 துடிக்கின்றபாம்பரையாரத்துத்தனங்காமதியணிந்து
முடித்தொண்டராகிமுனிவர்பணிசெய்வதேயுமன்றிப் [பால
பிடிக்கொண்டுபூசிப்புகுநதொண்டர்பாதம்பொறுத்தபொற்
அடித்தொண்டனநதியென்பானுளனாரூரமுதினுக்கே. (ச)

37 கரும்புபிடித்தவர்காயப்பட்டாரங்கோர்கோடலியா
லிரும்புபிடித்தவரின்புறப்பட்டாரிவர்கணிற்க
அரும்புவிழ்தண்பொழில்சூழணியாரூரமர்ந்தபெம்மான
விரும்புமனத்தினையாதொன்றுநானுனைவேண்டுவனே. (ரு)

38 கொடிகொளவிதானங்கவரிபறைசங்கங்கைவிளக்கோ
டிடிவில்பெருஞ்செல்வமெய்துவரெய்தியுமூனமில்லா
வடிகளுமாரூரகத்தினராயினுமந்தவளப் [கூ)
பொடிகொண்டணிவாரக்கிருளொக்குநந்திபுறப்படிலே. (கூ-எ-அ-

9 சங்கொலிப்பித்திடுமின்சிறுகாலைத்தடவழலிற்
குங்குலியப்புகைக்கூட்டென்றுங்காட்டியிருபதுதோ
ளங்குலமவைத்தவன்செங்குருதிபுனலோடவன்றூன
றங்குலிவைத்தானடித்தாமரையென்னையாண்டனவே. (ய)

திருச்சிற்றம்பலம்.

ஆக்பபதிகம் - கOக.

---

திருக்காரோணம் - திருவிருத்தம்

திருச்சிற்றம்பலம்.

0 வடிவுடைமாமலைமங்கைபங்காகங்கைவார்சடையாய்
கடிகமழ்சோலைசுலவுகடனாகைக்காரோணனே
பிடிபடவாரணம்பேணுந்துரக்கிற்கப்பெரிய
இடிகுரல்வெள்ளெருதேறுமிதென்னைகொலெம்மிறையே. (க)

கற்றார் பயில்கடல் நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
விற்றாங் கியகரம் வேனெடுங் கண்ணி வியன்கரமே
நற்றா ணெடுஞ்சிலை நாண்வலித் தகர நின்கரமே
செற்றார் புரஞ்செற்ற சேவக மென்னைகொல் செப்புமினே. (௨)

தூமென் மலர்க்கணை கோத்துத்தீ வேள்வி தொழிற்படுத்த
காமன் பொடிபடக் காய்ந்த கடல்நாகைக் காரோணநின்
னாமம் பரவி நமச்சிவாய வென்னு மஞ்செழுத்துஞ்
சாமன் றுரைக்கத் தருதிகண் டாயெங்கள் சங்கரனே. (௩)

பழிவழி யோடிய பாவிப் பறித்தலைக் குண்டர்தங்கள்
மொழிவழி யோடி முடிவேன் முடியாமைக் காத்துக்கொண்டாய்
கழிவழி யோத முலவு கடல்நாகைக் காரோண வென்
வழிவழி யாளாகு மாவண்ண மருளெங்கள் வானவனே. (௪)

செந்துவர் வாயக் கருங்கண் ணிணைவெண் ணகைத்தேமொழியார்
வந்து வலஞ்செய்து மாநட மாட மலிந்தசெல்வக்
கந்த மலிபொழில் சூழ்கடல் நாகைக்கா ரோணமென்று
சிந்தைசெய் வாரைப் பிரியா திருக்குந் திருமங்கையே. (௫)

பனைபுரை கைம்மத யானை யுரித்த பராபரனே
கனைகடல் சூழ்தரு நாகைக்கா ரோணத்தெங் கண்ணுதலே
மனைதுறந் தல்லுணா வல்லமண் குண்டர் மயக்கைநீக்கி
எனைநினைந் தாட்கொண்டாய்க் கென்னினியான் செயுமிச்சைகளே ()

சீர்மலி செல்வம் பெரிதுடைய செம்பொன் மாமலையே
கார்மலி சோலைசூழ் கடல்நாகைக்கா ரோணனே
வார்மலி மென்முலை யார்பலி வந்திடச் சென்றிரந்
தூர்மலி பிச்சைகொண் டுண்பது மாதிமை யோவுரையே. (௭)

வங்க மலிகடல் நாகைக்கா ரோணத்தெம் வானவனே
யெங்கள் பெருமானோர் விண்ணப்ப முண்டது கேட்டருளீர்
கங்கைச் சடையுட் கரந்தாய்க் கள்ளத்தை மெள்ளவுமை
நங்கை யறியிற் பொல்லாது கண்டாயெங்க ணாயகனே. (அ-௯)

கருந்தடங் கண்ணியுந் தானுங் கடல்நாகைக் காரோணத்தா
னிருந்த திருமலை யென்றிறைஞ் சாதன் றெடுக்கலுற்றான்
பெருந்தலை பத்து மிருபது தோளும் பிதிர்ந்தலற
விருந்தருளிச் செய்ததே மற்றுச் செய்திலனெம் மிறையே. (௰)

திருச்சிற்றம்பலம். ஆகப்பதிகம் - ௧௦௪.

திருஅதிகை - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

49 மாசிலொள்வாள்போன்மறியுமணிநீர்த்திரைதொகுதி
யூசலையாடியங்கொண்சிறையன்னமுறங்கலுற்றா
பாசறைநீலம்பருகியவண்டுபண்பாடல்கண்டு
வீசுங்கெடிலவடகரைத்தேயெந்தைவீரட்டமே. (௧)

50 பைங்காற்றவளைபறைகொட்டப்பாசிலைநீர்ப்படுக
ரைங்காற்குவளைமேலாவியுயிர்ப்பவருகுலவுஞ்
செங்காற்குருகிவைசேருஞ்செறிகெடிலக்கரைத்தே
வெங்காற்குருசிலைவீரனருளவைத்தவீரட்டமே. (௨)

51 அம்மலர்க்கண்ணியரஞ்சனஞ்செந்துவர்வாயிளையார்
வெம்முலைச்சாந்தம்விலைபெறுமாலையெடுத்தவர்க
டம்மருங்கிற்கிரங்கார்த்தடந்தோண்மெலியக்குடைவார்
விம்முபுனற்கெடிலக்கரைத்தேயெந்தைவீரட்டமே. (௩)

52 மீனுடைத்தண்புனல்வீரட்டரேனும்மைவேண்டுகின்ற
தியானுடைச்சில்குறையொன்றுளதானறுந்தண்ணெருக்கின
றேனுடைக்கொன்றைச்சடையுடைக்கங்கைத்திரைதவழுங்
கூனுடைத்திங்கட்குழவியெப்போதுங்குறிக்கொண்மினே. (௪)

53 ஆரட்டதேனுமிரந்துண்டசமகவன்றிரிந்து
வேரட்டநிற்பித்திடுகின்றதாலவிரிநீர்ப்பரவைச்
சூரட்டவேலவன்றாதையைச்சூழ்வயலாரதிகை
வீரட்டத்தானைவிரும்பாவரும்பாவவேதனையே. (௫)

54 படர்பொற்சடையும்பகுவாயரவும்பனிமதியுஞ்
சுடலைப்பொடியுமெல்லாமுளவேயவர்தூயதெண்ணீர்க்
கெடிலக்கரைத்திருவீரட்டராவர்கெட்டேனடைந்தார்
நடலைக்குநற்றுணையாகுங்கண்டீரவர்நாமங்களே. (௬)

55 காளங்கடந்ததோர்கண்டத்தராகிக்கண்ணார்கெடில
நாளங்கடிக்கோர்நகருமாகிற்குநன்கிசைந்த
தாளங்கள்கொண்டுங்குழல்கொண்டுமியாழ்கொண்டுந்தாமங்ஙனே
வேடங்கள்கொண்டுவிசும்புசெல்வாரவர்வீரட்டரே. (எ-அ-க-ம)

திருச்சிற்றம்பலம்.

---

ஆரப்பதிகம் - ௪௦௫.

திருப்புகலூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தன்னைச்சரணென்றுதாளடைந்தேன்றன்னடியடையப் 5/5
புன்னைப்பொழிற்புகலூரண்ணல்செய்வனகேண்மின்களோ
வென்னைப்பிறப்பறுத்தென்வினைகட்டறுத்தேழ்நரகத்
தென்னைக்கிடக்கலொட்டான்சிவலோகத்திருத்திடுமே. (௧)

பொன்னொக்குந்தன்மேனியனேபுணர்மென்முலையா 515
டன்னைவகுத்தனன்பாகத்தனேதமியேற்கிரங்காய
புன்னைமலர்த்தலைவண்டுறங்கும்புகலூரரசே
யென்னைவகுத்திலையேலிடும்பைக்கிடம்யாதுசொல்லே. (௨-௩)

பொன்னளவார்சடைக்கொன்றையினாய்புகலூரரசே 51
மன்னுளரேதவர்க்கேடுமருந்தேவலஞ்சுழியாய்
யென்னளவேயுனக்காட்பட்டிடைக்கலத்தேகிடப்பார் [௯)
றுன்னளவேயெனக்கொன்றுமிரங்காதவுத்தமனே. (௪-௫-௬-௭-௮-

ஓணப்பிரானுமொளிர்மாமலர்மிசையுத்தமனுங் 51
காணப்பராவியுங்காணகின்றிலாக்காலொன்றுடைத்
தோணப்பிரானைவலிதொலைத்தோன்றொல்லைநீப்புகலூர்க்
கோணப்பிரானைக்குறுகக்குறுகாகொடுவினையே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௧௦௪.

---

திருக்கழிப்பாலை - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

நெய்தற்குருகுதன்பிள்ளையென்றெண்ணிநெருங்கிச்சென்று 51
கைதைமடற்புல்குதென்கழிப்பாலையதனுறைவாய
பைதற்பிறையொடுபாம்புடன்வைத்தபரிசறியோம்
எய்தப்பெறிலிரங்காதுகண்டாயெம்மிறையவனே. (௧)

பருமாமணியும்பவளமுத்தும்பரந்துந்திவரை 51
பொருமால்கரைமேற்றிரைகொணர்ந்தெற்றப்பொலிந்திலங்குங்
கருமாமிடறுடைக்கண்டனெம்மான்கழிப்பாலையெந்தை
பெருமானவனென்னையாளுடையானிப்பெருநிலத்தே. (௨)

நாட்பட்டிருந்தின்பமெய்தலுற்றிங்குநமன்றமராற் 5
கோட்பட்டொழிவதன்முந்துறவேகுளிர்நீர்த்தடத்துத்

தாட்பட்டதாமரைப்பொய்கையந்தணகழிபபாலையண்ணற
காட்பட்டொழிந்தவனறேவலலமாயிவவகலிடததே. (௩)

திருசசிறறமபலம

ஆகபபதிகம - கOஎ,

திருககடவூா - திருவிருததம

திருசசிறறமபலம

3 மருடடியோதிரவனறாசசிததமாணிமாாககணடயறகா
யிருட்டியமேனிவளைவாளெயிறறெறிபோலுஙகுஞசிச
சுருட்டியநாவிலவெஙகூறறமபதைபபவுதைததஙஙனே
யுருட்டியசேவடியானகடவூருறையுததமனே. (க)

4 பதத்தெழுமந்திரமஞ்செழுததோதிபபரிவினொடு
மிததெழுமாணிதனினனுயிருணணவெகுணடட தத
கததெழுகாலனைககணகுருதிபபுனலாறெழுக
வுதைததெழுசேவடியானகடவூருறையததமனே. (உ

5 கரபபுறுசிநதையர்காணடறகரியவனகாமனையு
நெருப்புமிழகண்ணினனீளபுனறகஙகையுமபொஙகரவும
பரபபியசெஞசடைபபாலவணணனகாலனைபபணடொருகா
லுரப்பியசேவடியானகடவூருறையுததமனே. (௩)

6 மறிததிகழ்கையினனவானவாகோனைமனமகிழ்நது
குறிததெழுமாணிதனுருயிாகொளவானகொதிததசிநதை
கறுகதெழுமூவிலைவேலுடைக்காலனைததானடற
வுறுககியசேவடியானகடவூருறையுததமனே. (ச)

7 குழைததிகழ்காதினனவானவாகோனைக்குளிர்நதெழுநது
பழக்கமோடர்ச்சிததமாணிதனுருயிர்கொளளவநத
அழற்பொதிமூவிலைவேலுடைக்காலனைததானலற
உழக்கியசேவடியானகடவூருறையுததமனே. (ரு)

8 பாலனுக்காயனறுபாற்கடலீந்துபனைததெழுநத
ஆனிழற்கீழிருந்தாரணமோதியருமுனிககாச
சூலமும்பாசமுங்கொண்டுதொடர்நதடர்நதோடிவநத
காலனைக்காய்ந்தபிரான்கடவூருறையுத்தமனே. (சு)

9 படர்சடைக்கொன்றையும்பன்னகமாலைபணிகயிரு
உடைதலைக்கோத்தழல்மேனியனுண்பலிக்கெனறுழல்வோன்
சுடர்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்துண்டமதா

வெண்டலைமாலையுங்கங்கைக்கரோடிவிரிசடைமேற் 517
பெண்டணிநாயகன்பேயுகந்தாடும்பெருந்தகையான்
கண்டணிநெற்றியன்காலனைக்காய்ந்துகடலில்விடம்
உண்டருள்செய்தபிரான்கடவூருறையுத்தமனே. (அ)

கேழலதாகிக்கிளறியகேசவன்காணரிதாய 517.
வாழிநன்மாமலர்க்கண்ணிடந்திட்டவம்மாலவற்கன்
றூழியுமீந்துவடுதிறற்காலனையன்றட்டது
ஊழியுமாயபிரான்கடவூருறையுத்தமனே (கூ)

தேனறிகழ்கொன்றையுங்கூவிளமாலைதிருமுடிமேல் 51
ஆனறிகைந்துகந்தாடும்பிரான்மலையார்த்தெடுத்த
கூனறிகழ்வாளரக்கன்முடிபத்துங்குலைந்துவிழ
வூனறியசேவடியான்கடவூருறையுத்தமனே. (ய)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - க0அ.

---

திருமாற்பேறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாணிக்குயிர்பெறக்கூற்றையுதைத்தனமாவலிபாற் 51
காணிக்கிரந்தவன்காண்டற்கரியன்கண்டதொண்டர்
பேணிக்கிடந்துபரவப்படுவன்போதுமஃதே
மாணிக்கமாவனமாற்பேறுடையான்மலரடியே. (க)

கருடத்தனிப்பாகனைக்கண்டற்கரியன்காதல்செய்யிற் 51
குருடாக்குமுன்னேகுடிகொண்டிருப்பன்கோலமல்கு
செருடக்கடிமலர்ச்செல்விதன்செங்கயலக்கயத்தால
வருடச்சிவப்பன்மாற்பேறுடையான்மலரடியே. (உ)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - க0கூ.

---

திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பொன்னார்திருவடிக்கொன்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யு 5
மென்னாவிகாப்பதற்கிச்சையுண்டேலிருங்கூற்றகல
மின்னாருமூவிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டல்
துன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே (க-உ.ரு-ச)
ஆவாசிறுதொண்டனென்னினைந்தாயென்றரும்பிணிநோய் 51
காவாதொழியிற்கலக்குமுன்மேற்பழிகாதல்செய்வார்

தேவாதிருவடிநீறென்னைப்பூசுசெந்தாமரையின் (௯)
பூவார்கடந்தையுட்டூங்கானைமாடத்தெம்புண்ணியனே. (ரு-சு-எ அ-

77 கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோல்
இடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே. (௰)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - ௧௪௰

---

பசுபதி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

78 சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்பரவி
யேமப்பலிப்பாரகட்கிரங்குகண்டாயிருங்கங்கையென்னுங்
காம்பலைக்கும்பணைத்தோளிகதிர்ப்பூணவனமுலைமேற்
பாம்பலைக்குஞ்சடையாயெம்மையாளும்பசுபதியே. (௧)

79 உடம்பைத்தொலைவித்துன்பாதந்தலைவைத்தவுத்தமர்கள்
இடும்பைப்படாமலிரங்குகண்டாயிருளோட்டச்செந்தீ
யடும்பொத்தனையவழன்மழுவாவழலேயுமிழும்
படம்பொத்தரவரையாயெம்மையாளும்பசுபதியே. (௨)

80 தாரித்தனந்தவிராவடியார்தமாற்றமென்னும்
மூரித்திரைப்பவ்வநீக்குகண்டாயமுன்னைநாளொருகால்
வேரித்தண்பூஞ்சுடராங்கணைவேளவெந்துவீழச்செந்தீப்
பாரித்தகண்ணுடையாயெம்மையாளும்பசுபதியே. (௩)

81 ஒருவரைத்தஞ்சமென்றெண்ணாதுன்பாதமிறைஞ்சுகின்றார்
அருவினைச்சுற்றமகல்விகண்டாயண்டமேயணவும்
பெருவரைக்குன்றம்பிளிறப்பிளந்துவேயதோளியஞ்சப்
பருவரைத்தோலுரித்தாயெம்மையாளும்பசுபதியே. (௪)

82 இருக்கொன்றுமின்றியெஞ்சாமையுன்பாதமிறைஞ்சுகின்றார்க்
கடர்க்கின்றநோயைவிலக்குகண்டாயண்டமெண்டிசையுஞ்
சுடர்த்திங்கள்சூடிச்சுழல்கங்கையோடுஞ்சுரும்புதுன்றிப்
படர்க்கொண்டசெஞ்சடையாயெம்மையாளும்பசுபதியே. (௫)

83 அடலைக்கடற்கழிவானின்னடியிணையேயடைந்தார்
கடலைப்படாமைவிலக்குகண்டாய்நறுங்கொன்றைதிங்கள்

சுடலைப்பொடிச்சுண்ணமாசுணஞ்சூளாமணிகிடந்து
படரச்சுடாமகுடாவெம்மையாளும்பசுபதியே. (௬)

அறவிதந்தொழிலேபுரிந்துன்சீருமடியேதொழுவார்
பிறவிதொழிலதுமாறறுகண்டாயமதினமூன்றுடைய
அறவைத்தொழில்புரிந்தந்தரத்தேசெலவுமந்திரத்தோப
பறவைப்புரமெரித்தாயெம்மையாளும்பசுபதியே. (எ-அ-௯)

சித்தத்துருகிச்சிவனெம்பிரானென்றுசிந்தையுள்ளே
பித்துப்பெருகப்பிதற்றுகின்றாய்பிணிதீர்த்தருளாய்
மத்தத்தரக்கனிருபதுதோளுமுடியுமெல்லாம்
பத்துற்றுநெரித்தாயெம்மையாளும்பசுபதியே. (௰)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - ௧௧௧

---

சரக்கறைத் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

விடையும்விடைப்பெரும்பாகாவென்விண்ணப்பம்மேம்முழுவாட்
படையும்படையாயநிரைத்தபல்பூதமும்பாயபுலித்தோல்
உடையுமுடைத்தலைமாலையுமாலைப்பிறையொதுங்கு
சடையுமிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௧)

விஞ்சத்தடவரைவெற்பாவென்விண்ணப்பம்மேலிலங்கு
சங்கக்கலனுஞ்சரிகோவணமுந்தமருகமும்
அந்திப்பிறையுமனல்வாயரவும்விரவியெல்லாஞ்
சந்தித்திருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௨)

வீந்தார்தலைகலனேந்தியென்விண்ணப்பம்மேலிலங்கு
சாந்தாயவெந்தவெண்ணீறுந்தகுணிச்சமும்
பூந்தாமரைமேனிப்புள்ளியுழைமானதள்புலித்தோ
லாந்தாமிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௩)

வெஞ்சமர்வேழத்துரியாயென்விண்ணப்பம்மேலிலங்கு
வஞ்சமாவந்தவருபுனற்கங்கையும்வானமதியு
நஞ்சமரோகக்குசிரமாலைக்குவெண்டலை
தஞ்சமாவாழுஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௪)

வேலைக்கடனஞ்சமுண்டாயென்விண்ணப்பமேலிலங்கு
காலற்கடந்தானிடங்கயிலாயமுங்காமர்கொன்றை

மாலைப்பிறையுமணிவாயரவுமவிரவியெல்லாஞ்
சாலக்கிடக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௫)

91 வீழிட்டகொன்றையந்தாராரோயெனவிண்ணப்பமேவிலங்கு
சூழிட்டிருக்குநறுங்குளாமணியுஞ்சுடலைநீறும
ஏழிட்டிருக்குநல்லக்குமரவுமென்பாமையொடுந்
தாழிட்டிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௬)

92 விண்டார்புரமூன்றுமெய்தாயெனவிண்ணப்பமேவிலங்கு
தொண்டாடியதொண்டடிப்பொடிநீறுந்தொழுதுபாதங்
கண்டார்கள்கண்டிருக்குங்கயிலாயமுங்காமர்கொன்றைத்
தண்டாரிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௭)

93 விடப்பட்டியேறுகந்தேறியென்விண்ணப்பமேவிலங்கு
கொடுக்கொட்டிகொக்கரைதக்கைக்குழல்தாளமவீணைமொந்தை
வடுவிட்டகொன்றையுமவன்னியுமத்தமுமவாளரவுந்
தடுக்கட்டமாடுஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௮)

94 வெண்டிரைக்கங்கைவிதாவென்விண்ணப்பமேவிலங்கு
கண்டிகைபூண்டுகடிசூத்திரமேற்கபாலவடங்
குண்டிகைகொக்கரைகொன்றைபிறைகுறட்பூதப்பட
டண்டிவைத்திட்டசரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௯)

95 வேதித்தவெம்மழுவாளியென்விண்ணப்பமேவிலங்கு
சோதித்திருக்குநறுங்குளாமணியுஞ்சுடலைநீறும
பாதிப்பிறையும்படுதலைத்துண்டமும்பாயபுலித்தோல
சாதித்திருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௰)

96 விவந்தாடியகழலெந்தாயென்விண்ணப்பமேவிலங்கு
தவந்தானெடுக்கத்தலைபத்திறுத்தனைதாழ்புலித்தோல
சிவந்தாடியபொடிநீறுஞ்சிரமாலைசூடிநின்று
தவந்தானிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - கஙஉ.

---

தனித் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

97 வெள்ளிக்குழைத்துணிபோலுங்கபாலத்தன்வீழந்திலங்கு
வெள்ளிப்புரியன்னவெண்புரிநூலன்விரிசடைமேல

வெள்ளித்தகடன்னவெண்பிறைசூடிவெள்ளென்பணிந்து
வெள்ளிப்பொடிப்பவளப்புறம்பூசியவேதியனே. (௧)

உடலைத்துறந்துலகேழுங்கடந்துலவாததுன்பக்
கடலைக்கடந்துய்யப்போயிடலாகுங்கனகவண்ணப்
படலைச்சடைப்பரவைத்திரைக்கங்கைப்பனிப்பிறைவெண்
சுடலைப்பொடிக்கடவுட்கடிமைக்கட்டுணிநெஞ்சமே. (௨)

முன்னேயுரைத்தாலுமன்னேயொக்குமிம்மூவுலகுக்
கன்னையுமத்தனுமாவாயழல்வண்ணநீயலையோ
உன்னைநினைந்தேகழியுமென்னாவிகழிந்ததற்பின்
என்னைமறக்கப்பெறுமெம்பிரானுன்னைவேண்டியதே. (௩)

நின்னையெப்போதுநினையலொட்டாய்நீநினையப்புகிற்
பின்னையெப்போதேமறப்பித்துப்பேர்த்தொன்றுநாடுவித்தி
யுன்னையெப்போதுமறந்திட்டுனக்கினிதாவிருக்கும்
என்னையொப்பாருளரோசொல்லுவாழியிறையவனே. (௪)

முழுத்தழன்மேனித்தவளப்பொடியன்கனகக்குன்றத்
தெழிற்பெருஞ்சோதியையெங்கள்பிரானையிகழ்திர்கண்டீர்
தொழப்படுந்தேவர்தொழப்படுவானைத்தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர்தம்மாற்றொழுவிக்குந்தன்றொண்டரையே. (௫)

விண்ணகத்தான்மிக்கவேதத்துளான்விரிநீருடுத்த
மண்ணகத்தான்றிருமாலகத்தான்மருவற்கினிய
பண்ணகத்தான்பத்தர்சித்தத்துளான்பழநாயடியேன்
கண்ணகத்தான்மனத்தான்சென்னியானெங்கறைக்கண்டனே. (௬)

பெருங்கடன்மூடிப்பிரளயங்கொண்டுபிரமனும்போ
யிருங்கடன்மூடியிறக்குமிறந்தான்களேபரமுங்
கருங்கடல்வண்ணன்களேபரமுங்கொண்டுகங்காளராய்
வருங்கடன்மீளநின்றெம்மிறைநல்வீணைவாசிக்குமே.

வானந்துளங்கிலென்மண்கம்பமாகிலென்மால்வரையுந்
தானந்துளங்கித்தலைதடுமாறிலென்றண்கடலு
மீனம்படிலென்விரிசுடர்வீழிலென்வேலைநஞ்சுண்
டூனமொன்றில்லாவொருவனுக்காட்பட்டவுத்தமர்க்கே.

சிவனெனுநாமந்தனக்கேயுடையசெம்மேனியெம்மா
னவனெனையாட்கொண்டளித்திடுமாகிலவன்றனையான்

பவனெனுநாமம்பிடித்துத்திரிந்துபன்னாளழைத்தால்
இவனெனைப்பன்னாளழைப்பொழியானென்றெதிர்ப்படுமே. (௯)

என்னையொப்பாருன்னையெங்ஙனங்காண்பரியலியுனை
நின்னையொப்பார்நின்னைக்காணும்படித்தன்றுநின்பெருமை
பொன்னையொப்பாரித்தழலைவளராவிசெம்மழுவனுசெற்று
மின்னையொப்பாரமிளிருஞ்சடைக்கற்றைவேதியனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௧௧௩.

---

தனித் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பவளத்தடவரைபோலுந்திண்டோள்களத்தோள்மிசையே
பவளக்குழைத்தழைத்தாலொக்கும்பல்சடையச்சடைமேற்
பவளக்கொழுந்தன்னபைம்முகநாகமந்நாகத்தொடும்
பவளக்கண்வாலமதியெந்தைசூடும்பணிமலரே. (௧)

முருகார்நறுமலரிண்டைதழுவிவண்டேமுரலும்
பெரு[illegible]சடைக்கற்றையினுயபிணிமேயதிருந்த
விருகாற்குரம்பையிதுநானுடையதிதுபிரிந்தாற்
றருவாயெனக்குன்றிருவடிக்கீழோர்தலைமறைவே. (௨)

மூவாவுருவத்துமுக்கண்முதல்வமீக்கூரிடும்பை
காவாயெனக்கடைதூங்குமணியைக்கையாலமரர்
நாவாயசைத்தவொலியொலிமாறியதில்லையப்பாற்
றீயாயெரிந்துபொடியாக்கழிந்ததிரிபுரமே. (௩)

பத்தித்தபாவங்களம்மையிற்செய்தனவிம்மைவந்து
சாந்தித்தபின்னைச்சமழ்ப்பதெனேவந்தமரர்முன்னாண்
முந்திச்செழுமலரிட்டுமுடிதாழ்த்தடிவணங்கு
நந்திக்குமுந்துறவாட்செய்கிலாவிட்டநன்னெஞ்சமே. (௪)

அந்திவட்டத்திங்கட்கண்ணியனாறமர்செஞ்சடையான்
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனோ
சந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (௫)

உன்மத்தகமலர்சூடியுலகந்தொழச்சுடலைப்
பன்மத்தகங்கொண்டுபல்கடைதோறும்பலிதிரிவான

என்மனத்தகத்தேயிரவும்பகலும்பிரிவரியான்
தன்மனத்தகத்தோரிளம்பிறைசூடியசங்கரனே. (௬)

அரைப்பாலுடுப்பனகோவணச்சின்னங்களையமுண்ணல்
வரைப்பாவையைக்கொண்டதேகுடிவாழ்க்கைக்குவானிலாக்கும்
இரைப்பாம்புதலையேந்துகையாமறைதேடுமெந்தா
யுரைப்பாருரைப்பனவேசெய்தியாலெங்களுத்தமனே. (௭)

துறக்கப்படாதவுடலைத்துறந்துவெந்தூதுவரோ
டிறப்பனிறந்தாலிருவிசும்பேறுவனேறிவந்து
பிறப்பன்பிறந்தாற்பிறையணிவார்சடைப்பிஞ்ஞகன்போ
மறப்பன்கொலோவென்றென்னுள்ளங்கிடந்துமறுகிடுமே. (௮)

வேரிவளாயவிரைமலர்க்கொன்றைபுனைந்தன்கண்
சேரிவளாயவென்சிந்தைபுகுந்தான்றிருமுடிமேல்
வாரிவளாயவருபுனற்கங்கைச்சடைமறிவா
யேரிவளாவிக்கிடந்ததுபோலுமிளம்பிறையே. (௯)

கன்னெடுங்காலம்வெதும்பிக்கருங்கடனீர்சுருங்கிப்
பன்னெடுங்காலமழைதான்மறக்கினும்பஞ்சமுண்டென்
றென்னொடுசூளறுமஞ்சனெஞ்சேயிமையாதமுக்கட்
பொன்னெடுங்குன்றமொன்றுண்டுகண்டீரிப்புகலிடத்தே. (௰)

மேலுமறிந்திலனான்முகன்மேற்சென்றுகீழிடந்து
மாலுமறிந்திலன்மாலுற்றதேவழிபாடுசெய்யும்
பாலன்மிசைச்சென்றுபாசம்விசிறிமறிந்தசிந்தைக்
காலனறிந்தானறிதற்கரியான்கழலடியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம்-௧௧௪.

திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்த

முதற்றிருமுறை

முற்றிற்று.



சிவமயம்.

# இரண்டாந் திருமுறையின்

# அட்டவணை.

உ

சிவமயம்.

திருநாவுக்கரசுசுவாமிகளருளிச்செய்த

அடங்கன்முறைத்

# தேவாரப்பதிகங்கள்.

## இரண்டாந்திருமுறை,

### கோயிற்றிருக்குறுந்தொகை,

திருச்சிற்றம்பலம்.

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
யென்னம்பாலிக்குமாறுகண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே. (௧)

அருப்பற்றப்படவாயமலர்கொண்டுநீர்
சுரும்பற்றப்படத்தூவித்தொழுமினோ
கருப்பற்றச்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பெரும்பற்றப்புலியூரெம்பிரானையே. (௨)

அருச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீ
ரெரிச்சுற்றக்கிடந்தாரென்றயலவர்
சிரிச்சுற்றுப்பலபேசப்படாமுன்னந்
திருச்சிற்றம்பலஞ்சென்றடைந்துய்ம்மினே. (௩)

அல்லலென்செயுமருவினையென்செயுந்
தொல்லைவல்வினைத்தொண்டர்தானென்செயுந்
தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோரடிமைபூண்டேனுக்கே. (௪)

ஊனிலாவியுயிர்க்கும்பொழுதெலா
நானிலாவியிருப்பனென்னாதனைத்

தேனிலாவியசிற்றம்பலவனார்
வானிலாவிருக்கவும்வைப்பரே. (௬)

223 சிட்டராவானவாசென்றுவரங்கொளுஞ்
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலத்துறை
சிட்டன்சேவடிகைதொழச்செல்லுமச்
சிட்டர்பாலணுகான்செறுகாலனே. (௭)

224 ஒருத்தனுருலகங்கட்கொருசுடர்
திருத்தனார்தில்லைச்சிற்றம்பலவனார்
விருத்தனாரிளையார்விடமுண்டவெம்
அருத்தனாரடியாரையறிவரே. (௮)

225 விண்ணிறைந்ததோர்வெவ்வழலின்னுரு
வெண்ணிறைந்தவிருவாக்கறிவொணுக்
கண்ணிறைந்தகடிபொழிலம்பலத்
துண்ணிறைந்துநின்றாடுமொருவனே. (௯)

226 வில்லைவட்டப்படவாங்கியவுணர்தம்
வல்லைவட்டம்மதின்மூன்றுடனமாய்த்தவன
றில்லைவட்டந்திசைகைதொழுவாரவினை
யொல்லைவட்டங்கடந்தோடுதலுண்மையே. (௧௦)

227 நாடிநாரணனான்முகனென்றிவர்
தேடியுந்திரிந்துங்காணவல்லரோ
மாடமாளிகைசூழ்தில்லையம்பலத்
தாடிபாதமென்னெஞ்சுளிருக்கவே. (௧௧)

228 மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்றிருமலை
யதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றடைந்துய்ம்மினே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.
ஆகப்பதிகம் - ௧.

---

கோயிற்றிருக்குறுந் - தொகை.
திருச்சிற்றம்பலம்.

9 பனைக்கைமும்மதவேழமுரித்தவ
1 னினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவ

னைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனே. (௧)

தீர்த்தனைச்சிவனைச்சிவலோகனை
மூர்த்தியைமுதலாயவொருவனைப்
பார்த்தனுக்கருள்செய்தசிற்றம்பலக்
கூத்தனைக்கொடியேன்மறந்துய்வனே. (௨)

கட்டும்பாம்புங்கபாலங்கைமானமறி
யிட்டமாயிடுகாட்டெரியாடுவான்
சிட்டர்வாழ்தில்லையம்பலக்கூத்தனை
யெட்டனைப்பொழுதும்மறந்துய்வனே. (௩)

மாணிபால்கறந்தாட்டிவழிபட
நீணுலகெலாமாளக்கொடுத்தவ
னாணியைச்செம்பொனம்பலத்துள்நின்ற
தாணுவைத்தமியேன்மறந்துய்வனே. (௪)

பித்தனைப்பெருங்காடரங்காவுடை
முத்தனைமுளைவெண்மதிசூடியைச்
சித்தனைச்செம்பொனம்பலத்துள்நின்ற
வத்தனையடியேன்மறந்துய்வனே. (௫)

நீதியைநிறைவைமறைநான்குட
னோதியையொருவர்க்குமறிவொணாச்
சோதியைச்சுடர்ச்செம்பொனின்னம்பலத்
தாதியையடியேன்மறந்துய்வனே. (௬)

மைகொள்கண்டனெண்டோளன்முக்கண்ணினன்
பைகொள்பாம்பரையார்த்தபரமனார்
செய்யமாதுறைசிற்றம்பலத்தெங்க
ளையனையடியேன்மறந்துய்வனே. (௭)

முழுதும்வானுலகத்துள்ளதேவர்கள்
தொழுதுபோற்றியுந்தூயசெம்பொன்னினா
லெழுதிமேய்ந்தசிற்றம்பலக்கூத்தனை
யிழுதையேன்மறந்தெங்ஙனமுய்வனே. (௮)

காருலாமலர்க்கொன்றையந்தாரனை
வாருலாமுலைமங்கைமணாளனைத்

தேருலாவியதில்லையுட்கூத்தனை
1 பாரிலாவமுதைமறந்துய்வனோ. (௯)

238 ஓங்குமால்வரையேந்தலுற்றானசிரம
வீங்கிவிம்முறவூன்றியதாளினன்
தேங்குநீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப
பாங்கிலாததொண்டனேன்மறந்துய்வனோ. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௨

---

திருஅரத்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

239 கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
வுடலுளானையொப்பாரியிலாதவெம
மடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாநதொழுவதே. (௧)

240 கரும்பொப்பானைக்கரும்பினிற்கட்டியை
விரும்பொப்பானைவிண்ணோருமறிகிலா
வரும்பொப்பானையரத்துறைமேவிய
சுரும்பொப்பானைக்கண்டீர்நாநதொழுவதே. (௨)

241 ஏறொப்பானையெல்லாவுயிர்க்குமிறை
வேறொப்பானைவிண்ணோருமறிகிலா
வாறொப்பானையரத்துறைமேவிய
வூறொப்பானைக்கண்டீர்நாநதொழுவதே. (௩)

242 பரப்பொப்பானைப்பகலிருணன்னிலா
விரப்பொப்பானையிளமதிசூடிய
வரப்பொப்பானையரத்துறைமேவிய
சுரப்பொப்பானைக்கண்டீர்நாநதொழுவதே. (௪)

243 நெய்யொப்பானைநெயிற்சுடர்போல்வதோர்
மெய்யொப்பானைவிண்ணோருமறிகிலா
மையொப்பானையரத்துறைமேவிய
கையொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௫)

244 நிதியொப்பானைநிதியிற்கிழவனை
விதியொப்பானைவிண்ணோருமறிகிலா

ரதியொப்பானையரத்துறைமேவிய
கதியொப்பானைக்கண்டீர்நாநதொழுவதே. (௬)

புனலொப்பானைப்பொருநதலர்தமமையே 524
மினலொப்பானைவிண்ணோருமறிகிலா
ரனலொப்பானையரத்துறைமேவிய
கனலொப்பானைக்கண்டீர்நாநதொழுவதே. (௭)

பொன்னொப்பானைப்பொனனிறசுடாபோல்வதோா 524
மின்னொப்பானைவிண்ணோருமறிகிலா
ரன்னொப்பானையரத்துறைமேவிய
தன்னொப்பானைககண்டீர்நாங்தொழுவதே. (௮)

காழியானைக்கனவிடையூருமெய 52
வாழியானைவல்லோருமென்றினனவ
ராழியான்பிரமற்குமரத்துறை
யூழியானைககண்டீர்நாநதொழுவதே. (௯)

கலையொப்பானைக்கற்றார்கசோரமுதினை 524
மலையொப்பானைமணிமுடியூனறிய
வலையொப்பானையரத்துறைமேவிய
கிலையொபபானைக்கண்டீாநாநதொழுவதே. (௰)

திருசசிறறமபலம.

ஆசபபதிகம்

திருஅணணாமலை - திருககுறுநதொகை.

திருசசிறறமபலம.

வட்டனைமதிசூடியைவானவா 52
சிட்டனைத்திருவண்ணாமலையனை
யிட்டனையிகழ்ந்தார்புரமூனறையு
மட்டனையடியேன்மறநதுயவனே. (௧)

வானனைமதிசூடியமைநதனைத 52
தேனனைத்திருவண்ணாமலையனை
யேனனையிகழ்ந்தார்புரமூன்றெயத
வானனையடியேன்மறந்துயவனே. (௨)

மத்தனைமதயானையுரித்தவெஞ 52
சித்தனைத்திருவண்ணாமலையனை
முத்தனைமுனிந்தாாபுரமூன்றெய்த
வித்தனையடியேன்மறந்துய்வனே. (௩)

5252 காற்றனைக்கலக்கும்வினைபோயறத்
தேற்றனைத்திருவண்ணாமலையனைக்
*கூற்றனைக்கொடியார்புரமூன்றெய்த
†வாற்றனையடியேன்மறந்துய்வனோ

5253 மின்னனைவினைதீர்த்தென்னையாட்கொண்ட
தென்னனைத்திருவண்ணாமலையனை
யென்னனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
வன்னனையடியேன்மறந்துய்வனோ

254 மன்றனைமதியாதவன்வேள்விமேற்
சென்றனைத்திருவண்ணாமலையனை
வென்றனைவெகுண்டார்புரமூன்றையுங்
கொன்றனைக்கொடியேன்மறந்துய்வனோ.

255 வீரனைவிடமுண்டனைவிண்ணவர்
தீரனைத்திருவண்ணாமலையனை
யூரனையுணரார்புரமூன்றெய்த
வாரனையடியேன்மறந்துய்வனோ.

256 கருவினைக்கடல்வாயவிடமுண்டவெந்
திருவினைத்திருவண்ணாமலையனை
யுருவினையுணரார்புரமூன்றெய்த
வருவினையடியேன்மறந்துய்வனோ.

257 அருத்தனையரவைந்தலைநாகத்தனத்
திருத்தனைத்திருவண்ணாமலையனைக்
கருத்தனைக்கடியார்புரமூன்றெய்த
வருத்தனையடியேன்மறந்துய்வனோ.

258 அரக்கனையலறவிரலூன்றிய
திருத்தனைத்திருவண்ணாமலையனை
யிரக்கமாயென்னுடலுறுநோய்களைத்
துரக்கனைத்தொண்டனேன்மறந்துய்வனோ.

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் .

---

* கூற்றனை என்றும் † வாற்றனை என்பதும் பாடம்

திருஅண்ணாமலை. திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பட்டியேறுகந்தேறிப்பலவில 52
மிட்டமாகவிரந்துண்டுழிதரு
மட்டலூர்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுப்போம்வினைகேடில்லைகாணுமினே. (௧)

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றவர் 52
கற்றமாயிருந்தார்குழலாளொடு
மற்றந்தீர்க்குமண்ணாமலைகைதொழ
நற்றவத்தொடுஞானத்திருப்பரே. (௨)

பல்லிலோடுகையேந்திப்பலவில 52
மொல்லைச்சென்றுணங்கல்கவாவார்வ
ரல்லல்தீர்க்குமண்ணாமலைகைதொழ
நல்லவாயினநம்மையடையுமே. (௩)

பாடிச்சென்றுபலிக்கென்றுநின்றவ 52
ரோடிப்போயினார்செய்வதொன்றென்கொலோ
வாடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போகுநம்மேலைவினைகளே. (௪)

தேடிச்சென்றுதிருந்தடிதேத்துமி 52
னாடிவந்தவர்நம்மையுமாட்கொள்வ
ராடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போநமதுள்ளவினைகளே. (௫)

கட்டியொக்குங்கரும்பினிடைத்துணி 52
வெட்டிவினைகள்பாடும்விகிர்தனை
நட்டமூர்த்தியண்ணாமலைமேவிய
கட்டமாடியைநண்ணநன்காகுமே (௬)

கேணிக்கொண்டையாவேடமுன்செண்டவ 52
பரணிசட்டங்களாடும்பழமனை
ராணிப்பொன்னினண்ணாமலைகைதொழப்
பேணிநின்றபெருவினைபோகுமே (௭)

கண்டந்தான்கறுத்தான்காலனாருயி 52
பண்டுகோல்கொடுபோயதபரமனை

ரண்டதறோங்குமண்ணுமலைகைதொழ
விண்டுபோகுநமமேலவினைகளே. (அ)

267 முந்திசசென்றுமுபபோதும்வணங்குமின்
அந்திவாயொளியான்றனணுமலை
சிந்தியாவெழுவாாவினைதீாததிடு
கந்தமாமலாசூடுஙகருததனே. (கூ)

268 மறையினுனெனுமாலவனகாணகிலா
நிறையுமீாமையுள்நின்றருள்செயதவ
னுறையுமமாணபினணணுமலைகைதொழுப
புறையுநாளுசெய்தபாவஙகளாமனவே. (க0)

திருசசிறறமபலம.
ஆசபபதிகம - ரு

திருஆருா - திருககுறுநதொகை.
திருசசிறறமபலம.

269 எப்போதும்பிறையுமமறவாதநீா
மூப்போதுமபிரமனசெழுநினறவனை
செப்போதுமபொனிறமேனிசசிவனவ
னப்போதைககருசலெனனுமாரூரனே. (க)

270 சடையினமேலுமோாதையலைத*தைவர
வடையிலாவரவையணாயாாததவா
புடையினோாதடஙகணணுமைபாகமா
மடைவாபோலிடுகாடராரூரரே. (உ)

271 விண்டவெண்டலையேகலனுகவே
கொண்டகம்பலிதேருஙகுழகனா
துண்டவெண்பிறைவைததவிறையவ
ரண்டவாணாககருளுமாரூரரே. (ங)

272 விடையுமேறுவாவெண்டலையிறபலி
கடைகடோறுந்திரியுமெஙகண்ணுத
லுடையுஞ்சீரையுறைவதுகாட்டிடை
யடைவாபோலரஙகாகவாரூரரே. (ச)

* வைததவெனறும ; பாடம்.

உள்ளமேயொன்றுறுதியுரைப்பனான்
வெள்ளந்தாங்குவிரிசடைவேதிய
னள்ளல்நீர்வயலாரூரமர்ந்தவெம்
வள்ளல்சேவடிவாழ்த்திவணங்கிடே. (௧௦)

விண்டமாமலர்மேலுறைவானொடுங்
கொண்டல்வண்ணனுங்கூடியறிகிலா
வண்டவாணன்றனாரூரடிதொழப்
பண்டைவல்வினைநில்லாபறையுமே. (௧௧)

மையுலாவியகண்டத்தனண்டத்த
கையுலாவியசூலத்தன்கண்ணுத
லையனாரூரடிதொழுவார்க்கெல்லா
முய்யலாமல்லலொன்றிலைகாண்மினே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

ப்பதிகம்.

திருஅன்னியூர் • திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பாறலைத்தபடுவெண்டலையினன்
னீறலைத்தசெய்யமேனியனேரிழை
கூறலைத்தமெய்க்கோளரவாட்டிய
வாறலைத்தசடையன்னியூரரே. (௧)

பண்டொத்தமொழியாளையோர்பாகமா
யிண்டைச்செஞ்சடையன்னிருந்தசோதிசேர்
கண்டத்தன்கரியினனுரிபோர்த்தவ
னண்டத்தப்புறத்தானன்னியூரரே. (௨)

பரவிநாளும்பணிந்தவர்தம்வினை
துரவையாகத்*துடைப்பவர்தாமிடங்
குரவநாறுங்குழலுமைகூறரா
யரவமாட்டுவர்போலன்னியூரரே. (௩)

வேதகீதர்விண்ணோர்க்குமுயர்ந்தவர்
சோதிவெண்பிறைதுன்றுசடைக்கணி
நாதர்நீதியினாலடியார்தமக்
காதியாகிநின்றாரன்னியூரரே. (௪)

* துரப்பவை • என்பதும் • பாடம்.

295 எம்பிரானிமையோர்கள்தமக்கெலா
மின்பராகியிருந்தவெம்மீசனார்
துன்பவல்வினைபோகத்தொழுமவர்க்
கன்பராகிநின்றாரன்னியூரரே. (௫)

296 வெந்தநீறுமெய்பூசினமேனியர்
கந்தமாமலர்சூடுங்கருத்தினர்
சிந்தையார்சிவனார்செய்யதீவண்ண
ரந்தணாளர்கண்டாரன்னியூரரே. (௬)

297 ஊனையார்தலையிற்பலிகொண்டுழல்
வானைவானவர்தாங்கள்வணங்கவே
தேனையார்குழலாளையோர்பாகமா
வானையீருரியாரன்னியூரரே. (௭)

298 காலைபோய்ப்பலிதேர்வர்கண்ணார்நெற்றி
மேலவானவர்வந்துவிரும்பிய
சோலைசூழ்புறங்காடரங்காகவே
யாலின்கீழறத்தாரன்னியூரரே. (௮)

299 எரிகொள்மேனியரென்பணிந்தின்பராய்த்
திரியுமூவெயிலத்தீயெழச்செற்றவர்
கரியமாலொடுநான்முகனாணப்பற
கரியராகிநின்றாரன்னியூரரே. (௯)

300 வஞ்சரக்கன்கரமுஞ்சிரத்தொடு
மஞ்சுமஞ்சுமோராறுநான்குமிறப்
பஞ்சிமெல்விரலாலடர்த்தாயிழை
யஞ்சலஞ்சலென்றாரன்னியூரரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - அ.

திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

301 ஓதமால்கடல்பாவியுலகெலா
மாதரார்வலங்கொண்டுமறைக்காட்டைக்
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௧)

பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்கந்தானுடைமாமறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியாரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநும்பணிசெய்யிலே. (௨)

புன்னைநாழல்புறணியருகெலா
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
அன்னமென்னடையாளையோர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே (௩)

அட்டமாமலர்சூடியடம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியு
மிட்டமாகவிருக்குமிடமதே. (௪)

நெய்தலாம்பல்நிறைவயல்சூழ்தரு
மெய்யினார்வலங்கொள்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டீர்கவர்புன்சடைப்
பைதல்வெண்பிறைபாம்புடன்வைப்பதே. (௫)

அஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
வஞ்சின்றிவலங்கொள்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணாந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (௬)

விண்ணுளார்விரும்பியெதிர்கொள்ளவே
மண்ணுளார்வணங்கும்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (௭)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
வுருவினாளுமையாளையோர்பாகமாய்
மருவினாய்கங்கையைச்சென்னிதன்னிலே. (௮)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமார்வலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
பங்கையில்லனலேந்தலுமழகிதே. (௯)

310 குறைககாட்டான்விட்டகோகுத்தமாமலை
யிறைககாட்டியெடுததான்றலையீரைந்து
மறைக்காட்டானிறையூன்றலும்வாயவிட்டா
னிறைககாட்டாயெம்பிரானுனையேத்தவே. (கo)

திருசசிறறமபலம.

ஆகப்பதிகம் கூ.

திருமறைககாடு - திருககுறுநதொகை.

திருசசிறறமபலம

311 பணணினோமொழியாளுமைபஙகரோ
மணணினாவலஞ்செயமறைககாடரோ
கணணினாலுமைககாணககதவினைத
திணணமாகததிறநதருளசெயமமினே. (க)

312 ஈண்டுசெஞ்சடையாகததுளீசரோ
மூண்டகாமுகிலின்முறிககண்டரோ
வாண்டுகொணடநீரோயருளசெயதிடும
நீண்டமாகககதவினவலிநீககுமே. (உ)

313 அட்டமூர்ததியதாகியவபபரோ
துட்டாவாணபுரஞசுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசெனனிபபரமரோ
சட்டவிககதவநதிறபபிமமினே. (ங)

314 அரியநான்மறையோதியநாவரோ
பெரியவான்புரஞசுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருததரோ
பெரியவான்கதவமபிரிவிககவே. (ச)

315 மலையில்நீடிருககுமமறைககாடரோ
கலைகள்வநதிறைஞசுஙகழலெத்தரோ
விலையில்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீககுமே. (ரு)

316 பூக்குந்தாழைபுறணியருகெலா
மாக்குநதண்பொழில்சூழ்மறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியீரடிகேளுமை
நோக்கிக்காணக்கதவைத்திறவுமே. (சா)

317 வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
வந்தமில்லியணிமறைக்காடரோ

எந்தைநீ யடியார்வந் திறைஞ்சிட
விந்தமாகக் கதவம் பிணிக்குமே. (௭)

ஆறுசூடு மணிமறைக் காடரோ
கூறுமா துமைக்கிந்து குழகரோ
ஏறதேறிய வெம்பெரு மானிந்த
மாறிலாக் கதவம் வலிக்குமே. (௮)

சுண்ணவெண் பொடிப் பூசுஞ் சுவண்டரோ
பண்ணி யேறுகந் தேறும் பரமரோ
அண்ணலாதி யணிமறைக் காடரோ
திண்ணமாகக் கதவந் திறப்பிமின். (௯)

அரக்கனை விரலா லடர்த்திட்டநீ
இரக்கமொன் றிலீர்எம் பெருமானிரே
சுரக்கும் புன்னைகள் சூழ்மறைக் காடரோ
சரக்க விக்கதவந் திறப்பிமின் (௧௦)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் ௧௦.

---

திருநாவுக்கரசர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

தோற்றங் கோயிலுந் தோன்றிய கோயிலும்
வேற்றுக் கோயில் பலவுள மீயச்சூர்க்
கூற்றம் பாய்ந்த குளிர்புன் சடையாற்
கேற்றங் கோயில்கண் டீரிளங் கோயிலே. (௧)

வந்தனை யடைக்கு மடித் தொண்டர்கள்
பந்தனை செய்து பாவிக்கநின் றவன்
சிந்தனை திருத்துந் திருமீயச்சூ
ரெந்தமை யுடையா ரிளங் கோயிலே. (௨)

பஞ்ச மந்திர மோதும் பரமனார்
அஞ்ச வானை யுரித்தன லாடுவார்
நெஞ்சம் வாழி நினைந் திருமீயச்சூ
ரெந்தமை யுடையா ரிளங் கோயிலே. (௩)

நாறு மல்லிகை கூவிளஞ் செண்பகம்
வேறு வேறு விரித்த சடையிடை

யாறுகொண்டுகந்தான்றிருமீயச்சூ
ரேறுகொண்டுகந்தாரிளங்கோயிலே. (௪)

25 வெவ்வவண்ணத்துநாகம்வெருவவே
கவ்வவண்ணக்கனல்விரித்தாடுவா
செவ்வவண்ணந்திகழ்திருமீயச்சூ
ரெவ்வவண்ணபிரானிளங்கோயிலே. (௫)

26 பொன்னங்கொன்றையும்பூவணிமாலையும்
பின்னுஞ்செஞ்சடைமேற்பிறைசூடிற்று
மின்னுமேகலையாளொடுமீயச்சூ
ரின்னநாளகலாரிளங்கோயிலே. (௬)

27 படைகொள்பூதத்தன்பைங்கொன்றைத்தாரினன்
சடைகொள்வெள்ளத்தன்சாந்தவெண்ணீற்றினன்
விடைகொளூர்தியினான்றிருமீயச்சூ
ரிடைகொண்டேத்தநின்றாரிளங்கோயிலே. (௭)

28 ஆறுகொண்டசடையினர்தாமுமோர்
வேறுகொண்டதோர்வேடத்தராகிலும்
கூறுகொண்டுகந்தாளொடுமீயச்சூ
ரேறுகொண்டுகந்தாரிளங்கோயிலே. (௮)

29 வேதத்தானென்பர்வேள்வியுளானென்பர்
பூதத்தானென்பர்புண்ணியன்றன்னையே
கீதத்தான்கிளருந்திருமீயச்சூ
ரோதந்தீர்க்கநின்றாரிளங்கோயிலே. (௯)

30 கடுக்கனேகயிலாயமலைதனை
யெடுக்கலுற்றவிராவணனீடற
விடுக்கணின்றுவெகுண்டவன்மீயச்சூ
ரிடுக்கண்டீர்க்கநின்றாரிளங்கோயிலே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௧௧.

---

திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

31 கரைந்துகைதொழுவாரையுங்காதலன்
வரைந்துவைதொழுவாரையும்வாட்டல

ணிரந்தபாரிடத்தோடவர்கித்தலும்
விரைந்துபோவதுவீழிமிழலைக்கே. (௧)

ஏற்றுவெல்கொடியீசன்றனாறை
நாற்றஞ்சூடுவர்நன்னறுந்திங்களார்
நீற்றுச்சந்தனவெள்ளைவிரவலார்
வேற்றுக்கோலங்கொள்வீழிமிழலையே. (௨)

புனைபொற்சூலத்தன்போர்விடையூர்தியான்
வினைவெறுக்கத்தனவெண்மழுவாளினான்
நினையநின்றவனீசனையேயெனு
வினையிலார்தொழும்வீழிமிழலையே. (௩)

மாடத்தாடுமனத்துடன்வைத்தவர்
கோட்டத்தார்குருக்கேத்திரத்தார்பலர்
பாட்டத்தார்பழிப்பார்பழிப்பல்லதோர்
வேட்டத்தார்தொழும்வீழிமிழலையே (௪)

எடுத்தவெல்கொடியேறுடையானரா
ருடுப்பாகோவணமுணப்பூசிச்சையே
கெடுப்பதாவதுகீணின்றவல்வினை
விடுத்துப்போவதுவீழிமிழலையே. (௫)

குழலையாழ்மொழியாரிசைவேட்கையா
லுழலையாக்கையையூணுமுணர்விலீர்
தழலைநீர்மடிக்கொள்ளன்மினசாற்றினே.
மிழலையானடிசாரவிண்ணாளவோ. (௬)

திரான்றீத்திரளன்சடைத்தங்கிய
நீரனுடியநீற்றனவண்டார்கொன்றைத்
தாரன்மாலையன்றண்ணறுங்கண்ணியன்
வீரன்வீழிமிழலைவிகிர்தனே. (௭)

எரியினாரிறையாரிடுகாட்டிடை
நரியினார்பிரியாமகிழ்கின்றதோர்
எரியினார்தம்பிறப்பொடுசாதலை
விரியினார்தொழுவீழிமிழலையே. (௮)

நீண்டசூழ்சடைமேலோர்நிலாமதி
காண்டுசேவடிமேலோர்கனைகழல்

வேண்டுவாரவர்வீதிபுகுந்திலர்
மீண்டுமேபோவதுவீழிமிழலைக்கே. (௯)

40 பாலையாழொடுசெவ்வழிபண்கொள
மாலைவானவர்வந்துவழிபடு
மாலையாரழலந்தணராகுதி
வேலையார்தொழும்வீழிமிழலையே. (௧௦)

41 மழலையேற்றுமணாளன்றிருமலை
சுழலவார்த்தெடுத்தான்முடிதோளிறக
கழல்கொள்காலிற்றிருவிரலூன்றலு
மிழலையானடிவாழ்கெனவிட்டதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௧௨.

---

திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

42 என்பொனேயிமையோர்தொழுபைங்கழல்
நன்பொனேநலந்தீங்கறிவொன்றிலேன்
செம்பொனேதிருவீழிமிழலையு
ளன்பனேயடியேனைக்குறிக்கொளே. (௧)

43 கண்ணினுற்களிகூரக்கையாற்றொழு
தெண்ணுமாறறியாதிலேபேன்றனை
விண்ணுளாரதொழும்வீழிமிழலையு
ளண்ணலேயடியேனைக்குறிக்கொளே. (௨)

44 ஞாலமேவிசும்பேநலந்தீமையே
காலமேகருத்தேகருத்தாறெழுஞ்
சீலமேதிருவீழிமிழலையுட்
கோலமேயடியேனைக்குறிக்கொளே. (௩)

45 முத்தனேமுதல்வாமுகிழும்முளே
யொத்தனேயொருவாவுருவாகிய
சித்தனேதிருவீழிமிழலையு
ளத்தனேயடியேனைக்குறிக்கொளே. (௪)

46 கருவனேகருவாய்த்தெளிவார்க்கெலா
மொருவனேயுயிர்ப்பாயுணர்வாய்நின்ற

திருவனைத்திருவீழிமிழலையுட்
குருவனையடியேனைக்குறிக்கொளே. (ரு)

காத்தனைப்பொழிலேழையுங்காதலா
லாத்தனையமரர்க்கயன்றன்றலை
சேர்த்தனைத்திருவீழிமிழலையுட்
கூத்தனையடியேனைக்குறிக்கொளே. (சு)

நீதியானவா நித்தனியமஞ்செய்ய
சோதியானவருமுணராதசோதா
வேதியாவிகிர்தா திருவீழியு
ளாதியேயடியேனைக்குறிக்கொளே. (எ)

பழகினனடிக்குடியபாலனைக்
கழலின்மேல்வைத்தகாலனைச்சாடிய
வழகனேயணிவீழிமிழலையுட்
குழகனேயடியேனைக்குறிக்கொளே. (அ)

அண்டவானவர்கூடிக்கடைந்தநஞ்
சுண்டவானவனேயுணராவொன்றனே
விண்டவானபொழில்வீழிமிழலையுட்
கொண்டனேயடியேனைக்குறிக்கொளே. (கூ)

ஒருத்தனேங்கலைத்தாங்கலுமருளாய
வருத்தனுமஞ்ஞானமனமன்னிய
திருத்தனேதிருவீழிமிழலையு
ளருத்தனேயடியேனைக்குறிக்கொளே. (க௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் — கக.

---

திருவிடைமருது - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பாசமொன்றிலராய்ப்பலபத்தர்கள்
வாசநாண்மலர்கொண்டடிவைக்கவு
மீசனெம்பெருமானிடைமருதினிற்
பூசநாம்புகுதும்புனலாடவே. (க)

மறையினான்மலர்கொண்டடிவானவர்
முறையினன்மணிகள்வழிபாடுசெ

யிறைவனெம்பெருமானிடைமருதினி
லுறையுமீசனையுள்குமெனுள்ளமே. (௨)

354. கொன்றைமாலையுங்கூவிளமத்தமுஞ்
சென்றுசேரத்திகழ்சடைவைத்தவ
னென்றுமெந்தைபிரானிடைமருதினை
நன்றுகைதொழுவார்வினைநாசமே. (௩)

355 இம்மைவானவர்செல்வம்விளைத்திடு
மம்மையேற்பிறவித்துயர்தீர்த்திடு
மெம்மையாளுமிடைமருதன்கழல்
செம்மையேதொழுவார்வினைசிந்துமே (௪)

356 வண்டணைந்தனவன்னியுங்கொன்றையுங்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனா
ரெண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே (௫)

57 விறந்தறுமிடைமருதீசனா
கூறுவார்வினைதீர்க்குநங்குழகனா
ராறுசேர்சடைவைத்தவழகனார்
கூறியூறியுருகுமெனுள்ளமே. (௬)

358 விண்ணுளாரும்விரும்பப்படுபவர்
மண்ணுளாருமதிக்கப்படுபவ
ரொண்ணிறாப்பொழில்சூழிடைமருதினை
நண்ணினாரைநண்ணாவினைநாசமே. (௭)

359 வெந்தவெண்பொடிபூசுமவிர்தனா
கந்தமாலைகள்சூடுங்கருத்தனா
ரெந்தையெனிடைமருதினிலீசனைச்
சிந்தையாலநினைவார்வினைதேயுமே. (௮)

360 வேதமோதும்விரிசடையண்ணலார்
பூதம்பாடநின்றாடும்புனிதனா
ரேதந்தீர்க்குமிடைமருதாவென்று
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௯)

361 கனியினுங்கட்டிபட்டகரும்பினும்
பனிமலர்க்குழற்பாவைநல்லாரினுந்

தனிமுடிகவித்தாளுமரசினு
மினியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே. (௧௦)

முற்றிலாமதிசூடுமுதல்வனை 5
யொற்றினார்மலையாலரக்கன்முடி
யெற்றினாகொடியாரிடைமருதினைப்
பற்றினாரைப்பற்றாவினைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

ஆகப்பதிகம் - ௪௪.

திருவிடைமருது - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பறையினோசையும்பாடலினோசையு 53
மறையினோசையுமவைகுமவயலெலா
மிறைவனெங்களபிரானிடைமருதினி
லுறையுமீசனையுள்குமெனுள்ளமே. (௧)

மனத்துண்மாயனைமாசறுசோதியைப் 53
புனிற்றுப்பிள்ளைவெள்ளைமதிசூடியை
யெனக்குத்தாயையெம்மானிடைமருதினை
நினைத்திட்டேநிறைந்ததென்னுள்ளமே. (௨)

வண்டணைந்தனவன்னியுமத்தமுங் 53
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனை
யெண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே. (௩)

துணையிலாமயிற்றாங்கிருட்பேயகளோ 53
டணையலாவதெமக்கரிதேயென
வினையிலாவிடைமாமருதிலெழு
பணையிலாகமஞ்சொல்லுந்தன்பாங்கிக்கே. (௪)

பண்ணையுண்டமால்காணான்மலரடி 536
விண்ணைவிண்டயன்காணான்வியன்முடி
யொண்ணைமாமருதாவென்றென்மொய்க்குழல்
பண்ணையாயமுந்தானும்பயிலுமே. (௫)

மங்கைகாணக்கொடார்மணமாலையைக் 536
கங்கைகாணக்கொடார்முடிக்கண்ணியை

நங்கைமீர்இடைமருதரிந்நங்கைக்கே
எங்குவாங்கிகொடுத்தாரிதழியே. (சா-எ-அ-கூ-க௦-கக)

திருச்சிற்றமபலம.

---

ஆகபபதிகம . கூ.

திருபபேரெயில் - திருககுறுநதொகை.

திருச்சிற்றமபலம.

9 மறையுமோதுவர்மான்மறிகையினா
கறைகொள்கண்டமுடையகபாலியாா
துறையுமபோகுவாதூயவெண்ணீற்றினா
பிறையுஞ்சூடுவாபேரொயிலாளரே. (க)

70 கணக்கிலாரையுங்கற்றுவல்லாரையும்
வணககிலாநெறிகண்டுகொணடாரையுந
தணககுவாாதணிபபாரொபபொருளையும்
பிணககுவாரவாபேரொயிலாளரே. (உ)

71 சொரிவிப்பார்மழைசூழ்கதிாததிங்களை
விரிவிப்பார்வெயிறபட்டவிளஙகொளி
யெரிவிபபார்தணிபபாரொபபொருளையும
பிரிவிபபாரவாபேரொயிலாளரே. (௩)

72 செறுவிப்பாாசிலையாலமதில்தீர்த்தஙக
ளுறுவிப்பார்பலபத்தர்களுள்வினை
யறுவிபபாரதுவன்றியுநலவினை
பெறுவிபபாரவாபேரொயிலாளரே. (ச)

73 மற்றையாரறியாமழுவாளினா
பற்றியாட்டியோனைநதலைபபாம்பனை
சுற்றியாரவர்தூநெறியால்மிகு
பெற்றியாரவர்பேரொயிலாளரே. (ரு)

74 இருக்குவார்குழற்செல்வனசேவடி
யிருக்குவாய்மொழியாற்றனையேத்துவார்
சுருக்குவார்துயர்தோற்றங்களாற்றறப்
பெருக்குவாரவர்பேரெயிலாளரே. (சா)

75 முன்னையார்மயிலூர்திமுருகவேள்
தன்னையாரெனிற்றானோர்தலைமக

னென்னையாளுமிறையவனெம்பிரான்
பின்னையாரவர்பேரெயிலாளரே. (௭)

உழைத்துந்துள்ளியுமுள்ளத்தொளியுரு 537
விழைத்தும்மெனதபிரானென்றிராப்பக
லழைக்குமன்பினராயவடியவர்
பிழைப்புநீக்குவர்பேரெயிலாளரே. (௮)

நீருலாநிமிர்புன்சடையாவென்று 537
வேருலாவணங்கன்றிறல்வாட்டிய
வாருலாவனமென்முலையாளொடும்
பேருளாரவர்பேரெயிலாளரே. (௯)

பாணியார்படுதம்பெயர்ந்தாடுவர் 537
தூணியார்விசயற்கருள்செய்தவர்
மாணியாயமண்ணளந்தவனான்முகன்
பேணியாரவர்பேரெயிலாளரே. (௧௦)

மத்தவாளரக்கனயணிப்புட்பகஞ் 53
சித்தக்கவேதிருமாமலைக்கீழ்ப்புக்குப்
பத்தங்கார்த்தெடுத்தான்பத்துநீண்முடி
பிதக்கவூன்றியபேரெயிலாளரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் ௧௬.

திருவெண்ணி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

முத்தினைப்பவளத்தைமுளைத்தவெந் 538
தொத்தினைச்சுடரைச்சுடர்போலொளிப்
பித்தினைக்கொலுஞ்சினைவானவர்
நித்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௧)

வெண்ணித்தொன்னகர்மேயவெண்டிங்களார் 538
கண்ணித்தொத்தசடையர்கபாலியா
ரெண்ணித்தம்மைநினைந்திருந்தேனுக்கு
நண்ணித்திட்டமுதாறுமென்னாவுக்கே. (௨)

கற்றினைக்கனலைக்கதிர்மாமணி 538
நீற்றினைநினைப்பார்வினைநீக்கிடுங்
கூற்றினையுதைத்திட்டகுணமுடை
வீற்றினைநெருநற்கண்டவெண்ணியே. (௩)

நல்லனைத்திகழ்நான்மறையோதியைச்
சொல்லனைச்சுடரைச்சுடர்போலொளிர்
கல்லனைக்கடிமாமதின்மூன்றெய்த
வில்லனைநெருநற்கண்டவெண்ணியே. (௪)

சுடரைப்போலொளிர்சுண்ணவெண்ணீற்றனை
யடருஞ்சென்னியில்வைத்தவமுதினைப்
படருஞ்செஞ்சடைப்பான்மதிசூடியை
யிடரைநீக்கியையான்கண்டவெண்ணியே. (௫)

பூதனைப்பூயபுகலூரனைத்
தாதெனத்தவழும்மதிசூடியை
நாதனைநல்லோர்மனத்தோதியை
வேதனைநெருநற்கண்டவெண்ணியே. (௬)

ஒருத்தியையொருபாகத்தடக்கியும்
பொருத்தியபுனிதனைப்புரிபுன்சடைக்
கருத்தனைக்கறைக்கண்டனைக்கண்ணுதல்
திருத்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௭)

உடையனைச்சரிகோவணவாடைகொண்
டுடையனையுணராவினைதீர்த்திடும்
படையனைமழுவாளொடுபாய்தரும்
விடையனைநெருநற்கண்டவெண்ணியே. (௮)

பொருப்பனைப்புனலாளொடுபுன்சடை
யருப்பனையிளந்திங்களங்கண்ணியான்
பருப்பதம்பரவித்தொழுந்தொண்டர்கள்
விருப்பனைநெருநற்கண்டவெண்ணியே. (௯)

சூலவஞ்சனைவல்லவெஞ்சுந்தரன்
கோலமாவருள்செய்ததோர்கொள்கையான்
காலனஞ்சவுதைத்திருள்கண்டமாம்
வேலைநஞ்சனைக்கண்டதுவெண்ணியே. (௰)

இலையினார்கொன்றைசூடியவீசனார்
மலையினாலரக்கன்றிறல்வாட்டினார்
சிலையினால்மதிலெய்தவன்வெண்ணியைத்
தலையினாற்றொழுவார்வினைதீருமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் ௬௭.

திருக்கடம்பந்துறை — திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

முற்றிலாமுலையாளிவளாகிலு
மற்றந்தீர்க்குமறிவிலளாகிலுங்
கற்றைச்செஞ்சடையான்கடம்பந்துறைப்
பெற்றமூர்த்தியென்றாளெங்கள்பேதையே. (௧)

தனையிருந்ததோர்தன்மையராகிலு
முனைகுத்தீரத்தொழுதெழுமின்களோ
கனகப்புன்சடையான்கடம்பந்துறை
நினையவல்லவர்நீள்விசும்பாள்வரே. (௨)

ஆரியந்தமிழோடிசையானவன்
கூரியகுணத்தார்குறிநின்றவன்
காரிகையுடையான்கடம்பந்துறைச்
சீரியல்பத்தர்சென்றடைமின்களே. (௩)

பண்ணினின்மொழிகேட்கும்பரமனை
வண்ணநன்மலரான்பலதேவரும்
கண்ணனும்மறியான்கடம்பந்துறை
நண்ணநம்வினையாயினநாசமே. (௪)

மறைகொண்டமனத்தானைமனத்துளே
நிறைகொண்டநெஞ்சினுள்ளூறவைம்மினோ
கறைகண்டனுறையுங்கடம்பந்துறை
சிறைகொண்டவினைதீரத்தொழுமினே. (௫)

நங்கைபாகம்வைத்தநறுஞ்சோதியைப்
பங்கமின்றிப்பணிந்தெழுமின்களோ
கங்கைச்செஞ்சடையான்கடம்பந்துறை
யங்கமோதியரனுறைகின்றதே. (௬)

அரியநான்மறையாறங்கமாயைந்து
புரியன்றேவர்களேத்தநஞ்சுண்டவன்
கரியகண்டத்தினான்கடம்பந்துறை
யுரியவாறுநினைமடநெஞ்சமே. (௭)

பூமென்கோதையுமையொருபாகனை
யோமஞ்செய்துணர்மின்களுள்ளத்தாற்

காமற்காய்ந்தபிரான்கடம்பந்துறை
நாமமேத்தநந்தீவினைநாசமே. (அ)

பாரணங்கிவணங்கிப்பணிசெய
நாரணன்பிரமன்னறியாததோர
காரணன்கடம்பந்துறைமேவிய
வாரணங்கொருபாலுடைமைந்தனே. (கூ)

நூலால்நன்றுநினைமின்கள்நோய்கெடப
பாலனைநதுடனுடும்பரமனூர்
காலனூனறுகநதானகடம்பநதுறை
மேலால்நாஞ்செயதவல்வினைவீடுமே. (ய)

திருசசிற்றமபலம

ஆகபபதிகம - சஎ

திருககடமபூா - திருககுறுநதொகை

திருசசிறறமபலம

தளருமகோளரவததொடுதணமதி
வளருங்கோலவளர்சடையார்ககிடம
கிளரும்பேரிசைக்கினனரம்பாட்டறுக
களருங்கார்கடமபூாககரக்கோயிலே (க)

வெலவலான்புலனைந்தொடுவேதமுஞ
சொலவலான்சுழலுந்தடுமாற்றமு
மலவலான்மனையார்நதமெனறேளியைக
கலவலான்கடம்பூர்ககரககோயிலே. (உ)

பொய்தொழாதுபுலியுரியோன்பணி
செய்தெழாவெழுவார்பணிசெயதெழா
வைதெழாதெழு*வாரவரோழ்கதிர்
கைதொழாவெழுமின்கரக்கோயிலே. (ங)

துண்ணெனுமனத்தாற்றொழுநெஞ்சமே
பண்ணினுன்முனம்பாடலதுசெய்தே
எண்ணிலாரெயில்மூன்றுமெரித்தமுக்
கண்ணினுன்கடம்பூர்க்கரக்கோயிலே. (ச)

சுனையுள்நீலமலரனகண்டத்தன்
புனையும்பொன்னிறக்கொன்றைபுரிசடைக

---

* வானவென்கிர் என்பதும் - பாடம்.

கனையும்பைங்கழலான்கரக்கோயிலை
நினையுமுள்ளத்தவர்வினைநீங்குமே. (ரு)

குணங்கள்சொல்லியுங்குற்றங்கள்பேசியு
மணங்கிவாழ்த்துவரன்புடையாரெலாம்
வணங்கிவானமலர்கொண்டடிவைகலுங்
கணங்கள்போற்றிசைக்குங்கரக்கோயிலே. (சா)

பண்ணினார்மறைபல்பலபூசனை
மண்ணினார்செய்வதன்றியும்வைகலும்
விண்ணினார்கள்வியக்கப்படுவன
கண்ணினார்கடம்பூர்க்கரக்கோயிலே. (எ)

அங்கையாரழலேந்திநின்றாடலன்
மங்கைபாடமகிழ்ந்துடன்வார்சடைக்
கங்கையானுறையுங்கரக்கோயிலைத்
தங்கையாற்றொழுவார்வினைசாயுமே. (அ)

நங்கடம்பனைப்பெற்றவள்பங்கினன்
றென்கடம்பைத்திருக்கரக்கோயிலான்
றன்கடனடியேனையுந்தாங்குத
லென்கடன்பணிசெய்துகிடப்பதே. (கூ)

பணங்கொள்பாற்கடற்பாம்பணையானொடு
மணங்கமழ்மலர்த்தாமரையானவன்
பிணங்கும்பேரழலெம்பெருமாற்கிடங்
கணங்கள்போற்றிசைக்குங்கரக்கோயிலே. (க0)

வரைக்கனாலெஞ்சுதோளுடையான்றலை
யரைக்கவூன்றியருள்செய்தவீசனார்
திரைக்குந்தண்புனல்சூழ்கரக்கோயிலை
யுரைக்குமுள்ளத்தவர்வினையோயுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - கரு.

---

திருக்கடம்பூர்க்கரக்கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஒருவராயிருமூவருமாயவன்
குருவதாயகுழகனுறைவிடம்

பருவரால்குதிகொள்ளும்பழனஞ்சூழ்
கருவதாங்கடம்பூர்க்கரகோயிலே. (க)

வன்னிமத்தம்வளரிளந்திங்களோர்
கன்னியாளைக்கதிர்முடிவைத்தவன்
பொன்னின்மல்குபுணர்முலையாளொடு
மன்னினன்கடம்பூர்க்கரக்கோயிலே. (உ)

இல்லகோலமுமிந்தவிளைமையு
மல்லற்கோலமறுத்துய்யவல்லிரோ
யொலலைசென்றடையுங்கடம்பூர்நகர்ச
செல்வக்கோயில்திருக்கரக்கோயிலே. (ங)

வேறுசிந்தையிலாதவர்தீவினை
கூறுசெய்தகுழகனுறைவிட
மேறுசெல்வத்திமையவர்தாந்தொழு
மாறுசேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (ச)

திங்கள்தங்கியசெஞ்சடைமேலுமோர்
மங்கைதங்குமணாளனிருப்பிடம்
பொங்குசேர்மணற்புன்னையுஞாழலுந்
தெங்குசேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (ரு)

மலைலஞாலத்துவாழுமுயிர்க்கெலா
மெல்லையானபிரானிருப்பிடம்
கொல்லைமுல்லைகொழுந்தகைமல்லிகை
நல்லசேர்கடம்பூர்க்கரக்கோயிலே (சு)

தளரும்வாளரவத்தொடுதண்மதி
வளருமபொற்சடையாற்கிடமாவது
கிளரும்பேரொலிகின்னரம்பாட்டறாக
களரியார்கடம்பூர்க்கரக்கோயிலே. (எ)

உற்றாராவுறவாகியுயிர்க்கெலாம்
பெற்றாராயபிரானுறைவிட
முற்றார்மும்மதிலெய்தமுதல்வனார்
கற்றார்சேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (அ)

வெள்ளைநீறணிமேனியவர்க்கெலா
முள்ளமாயபிரானுறைவிடம்

பிள்ளைவெண்பிறைசூடியோர்சென்னியான்
கள்வன்சேர்கடம்பூர்க்கரக்கோயிலே. (௯)

பரப்புநீரிலங்கைக்கிறைவன்னவ
னுரத்தினாலடுக்கலெடுக்கலுற
விரக்கமின்றியிறைவிரலாற்றலை
யரக்கினான்கடம்பூர்க்கரக்கோயிலே (௰)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - ௨0

திருஇன்னம்பர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

என்னிலாருமெனக்கினியாரில்லை
யென்னிலுமினியானொருவனுள
னென்னுளேயுயிர்ப்பாய்ப்புறம்போந்துபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே. (௧)

மட்டுண்பார்கள்மடந்தையர்வாட்கண்ணுற்
கட்டுண்பார்கள்கருதுவதென்கொலோ
தட்டிமுட்டித்தள்ளாடித்தழுக்குழி
யெட்டுமூர்த்தியரின்னம்பரீசனே. (௨)

கனலுங்கண்ணணியுந்தண்மதியோடனற்
புனலுங்கொன்றையுஞ்சூடும்புரிசடை
யனலுஞ்சூலமுமானுமறிகையின
ரினலுமென்மனத்தின்னம்பரீசனே. (௩)

மழைக்கண்மாமயிலாலுமகிழ்ச்சியா
னழைக்குந்தன்னடியார்களைத்தம்பின்னைக்
குழைக்குந்தன்னைக்குறிக்கொளவேண்டியே
யிழைக்குமென்மனத்தின்னம்பரீசனே. (௪)

தென்னவனென்னையாளுஞ்சிவனவன்
மன்னவன்மதிப்பமறையோதியான்
முன்னமன்னவன்சேரலனூழியா
னின்னமின்புறவின்னம்பரீசனே. (௫)

விளக்கும்வேறுபடப்பிறருள்ளத்தி
லளக்குந்தன்னடியார்மனத்தன்பினைக்

குளக்குமென்னைக்குறிக்கொளவேண்டியே
யிளக்குமென்மனத்தின்னம்பரீசனே. (௬)

சடைக்கணாபுனலாளனலகையதோர
கடைக்கணால்மங்கைநோக்கிடவானமகள்
படைக்கணற்பருகப்படுவானமக்
கிடைக்கணயினின்னம்பரீசனே. (௭)

தொழுதுதூமலர்தூவித்துதித்துநின்
றழுதுகாமுற்றரற்றுகின்றாரையும்
பொழுதுபோக்கிப்புறக்கணிப்பாரையு
மெழுதுங்கீழ்க்கணக்கின்னம்பரீசனே. (௮)

விரியுந்தண்ணளிவேனிலவெண்பிறை
புரியுங்காமனைவேவப்புருவமுந்
திரியுமெல்லையில்மும்மதில்தீயெழுந்
தெரியநோக்கியவின்னம்பரீசனே. (௯)

சனியும்வெள்ளியுந்திங்களுநாயிறு
முனிவனுமுடிபத்துடையான்றனைக்
கனியவூன்றியகாரணமென்கொலோ
வினியனாயினின்னம்பரீசனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - உக.

---

திருக்குடமூக்கு - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

பூவணத்தவன்புண்ணியனண்ணியங்
காவணத்துடையானடியார்களைத்
தீவணத்திருநீறுமெய்பூசியோர்
கோவணத்துடையான்குடமூக்கிலே. (௧)

பூத்தாடிக்கழியாதேநீர்பூமியீர்
தீத்தாடித்திறஞ்சிந்தையுள்வைம்மினோ
வேர்த்தாடுங்காளிதன்விசைதீர்கென்று
கூத்தாடியுறையுங்குடமூக்கிலே. (௨)

நங்கையாளுமையாளுறைநாதனு
நங்கையாளொடாடுபதந்தாழ்சடைக

கங்கையாளவள்கன்னியெனப்படுங்
கொங்கையாளுறையுங்குடமூக்கிலே. (௩)

ஓதாநாவனந்திறத்தையுரைத்திரோ
லேதானுமினிதாகுமியமுனைச
சேதாவேறுடையானமர்ந்தவிடங்
கோதாவிரியுறையுங்குடமூக்கிலே. (௪)

நக்கரையனைநாடொறுநன்னெஞ்சே
வக்கரையுறைவானையணங்குதீ
யக்கரையோடரவரையார்த்தவன்
கொக்கரையுடையான்குடமூக்கிலே. (௫)

துறவிநெஞ்சினராகியதொண்டர்கள்
பிறவிநீங்கப்பிதற்றுமின்பித்தராய்
மறவனாய்ப்பார்த்தன்மேற்கணைதொட்டவெங்
குறவனுறையுங்குடமூக்கிலே. (௬)

தொண்டராகித்தொழுதுபணிமினோ
பண்டைவல்வினைபற்றறவேண்டுவீர்
விண்டவர்புரமூன்றெரிமாத்திரைக்
கொண்டவனுறையுங்குடமூக்கிலே. (௭)

காமியஞ்செய்துகாலங்கழியாதே
யோமியஞ்செய்தங்குள்ளத்துணர்மினோ
சாமியோடுசரச்சுவதியவள்
கோமியுமுறையுங்குடமூக்கிலே. (௮)

சிரமஞ்செய்துசிவனுக்குப்பத்தராய்
பரமனைப்பலநாளும்பயிற்றுமின்
பிரமன்மாலொடுமற்றொழிந்தார்கட்கெலாங்
குரவனுறையுங்குடமூக்கிலே. (௯)

அன்றுதானரக்கன்கயிலாயத்தைச்
சென்றுதானெடுக்கவுமையஞ்சலு
நன்றுதானக்குநல்விரலூன்றிப்பின்
கொன்றுகீதங்கேட்டான்குடமூக்கிலே. (௰)

திருச்சிற்றம்பலம்

ஆகப்பதிகம் - ௨௨.

திருநின்றியூர். திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொடுங்கண்வெண்டலைகொண்டுகுறைவிலைப்
படுங்கணொன்றிலராய்ப்பலிதேர்ந்துண்பர்
நெடுங்கண்மங்கையராட்டயர்நின்றியூர
கடுங்கைக்கூற்றுதைத்திட்டகருத்தரே. (௧)

வீதிவேல்நெடுங்கண்ணியர்வெள்வளை
நீதியேகொளப்பாலதுநின்றியூர்
வேதமோதிவிளங்குவெண்டோடுபாயக
காதில்வெண்குழைவைத்தவெங்கள்வரே. (௨)

புற்றினரவம்புலித்தோலமிசைச
சுற்றினர்கண்ணப்போர்வைகொண்டாகடர்
நெற்றிக்கண்ணுடையானமாநின்றியூர
பற்றினரைப்பறருவினைபாவமே. (௩)

பறையினோசையும்பாடலினோசையு
மறையினோசையுமல்கியவெல்லா
நிறையும்பூம்பொழில்சூழ்திருநின்றியூ
ருறையுமீசனையுள்குவென்னுள்ளமே. (௪)

சுனையுணீலஞ்சுளியுநெடுங்கண்ணு
னினையனென்றென்றுமேசுவதென்கொலோ
கினையுந்தண்வயல்சூழ்திருநின்றியூர்ப
புனையினீருதிபோர்த்தபரமரே. (௫)

உரைப்பகேண்மினுமுசசியுளான்றனை
திரைப்பொன்மாமதில்சூழ்திருநின்றியூ
ருரைப்பொற்கற்றையராரிவரோவெனிற்
றிரைத்துப்பாடித்திரிதருஞ்செல்வரே. (௬)

நின்றியூர்முகில்போலுங்கருங்களி
றின்றியேறலினாலிதுவென்கொலோ
நின்றியூர்பதியாகநிலாயவன்
வென்றியேறுடைஎங்கள்விகிர்தனே. (௭)

நிலைபிலாவெள்ளைமலையனீண்டதோர்
கொலைவிலாவெயில்எய்தகொடியவ

னிலையினார்வயல்சூழ்திருநின்றியூ
ருறையினாற்றொழுவார்வினையோயுமே. (௮)

அஞ்சியாகிலுமன்புபட்டாகிலு
நெஞ்சமவாழிநினைநின்றியூரைநீ
பிஞ்சிமாமதிலெயதிமையோர்தொழக்
குஞ்சிவான்பிறைசூடியகூத்தனை. (௯)

எளியெனுமொழியாவிலங்கைக்கிறை
களியினாற்கயிலாயமெடுத்தவ
னெளிபவூன்றவல்லாணமாநின்றியூ
ரளியினாற்றொழுவார்வினையலகுமே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

---

அப்பதிகம் - ௨௮.

திருவொற்றியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

ஒற்றியூருமொளிமதிபாம்பினை
யொற்றியூருமப்பாம்புமதனையே
யொற்றியூரவொருசடைவைத்தவ
னொற்றியூர்தொழநம்வினையோயுமே. (௧)

வாட்டமென்றுரைக்குமலையான்மக
ளீட்டவேயிருளாடியிடுபிணக்
காட்டிலேரிகடிக்கவெடுத்ததோ
ரோட்டைவெண்டலைக்கையொற்றியூரரோ. (௨)

கூற்றுதைத்தண்டத்தையஞ்சிக்குறிகொண்மி
னாற்றுதத்தண்டத்தடக்குமரனடி
நீற்றுத்தண்டத்தராயநினைவார்கட்கெலா
மூற்றுத்தண்டொயபாபோலொற்றியூரரோ. (௩)

சுற்றும்பேய்சூழலச்சுடுகாட்டெரி
பற்றியாடுவார்பாயபுலித்தோலினா
மற்றையூர்களெல்லாம்பலிதேர்ந்துபோ
யொற்றியூர்புகுறையுமொருவரே. (௪)

புற்றிலாடரவாட்டியுமையொடு
பெற்றமேறுகந்தேறும்பெருமையான்
மற்றையாரொடுவானவருந்தொழ
வொற்றியூருறைவானோர்கபாலியே. (௫)

57 போதுதாழ்ந்துபுதுமலர்கொண்டுநீர்
மாதுதாழ்சடைவைத்தமணாளனூ
ரோதுவேதியனூர்திருவொற்றியூர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௬)

58 பலவுமன்னங்கள்பன்மலர்மேற்றுஞ்சுங்
கலவமஞ்ஞைகள்கானெனவெள்குறு
முலவுபைம்பொழில்சூழ்திருவொற்றியூர்
நிலவினானடியேயடைநெஞ்சமே. (௭)

59 ஒன்றுபோலுமுகந்தவரேற்றது
ஒன்றுபோலுமுதைத்துக்களைந்தது
ஒன்றுபோலொளிமாமதிசூடிற்று
ஒன்றுபோலுகந்தானொற்றியூரரே. (௮)

60 படைகொள்பூதத்தாவேதத்தாகீதத்தா
சடைகொள்வெள்ளத்தர்சாந்தவெண்ணீற்றின
ருடையுந்தோலுகந்தானுறையொற்றியூ
ரடையுமுள்ளத்தவாவினையலகுமே. (௯)

61 வரையினாருயர்தோளுடைமன்னனை
வரையினால்வலிசெற்றவாவாழவிடந்
திரையினார்புடைசூழ்திருவொற்றியூ
ருரையினாற்பொலிந்தாருயர்ந்தார்களே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௨௪.

திருப்பாசூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

62 முந்திமூவெயிலெய்தமுதல்வனார்
சிந்திப்பார்வினைதீர்த்திடுஞ்செல்வனார்
அந்திக்கோன்றனக்கேயருள்செய்தவர்
பந்திச்செஞ்சடைப்பாசூரடிகளே. (௧)

63 மடந்தைபாகமகிழ்ந்தமணாளனார்
தொடர்ந்தவல்வினைபோகவிடுஞ்சோதியார்
கடந்தகாலனைக்கால்கொடுபாய்ந்தவர்
படர்ந்தநாகத்தர்பாசூரடிகளே. (௨)

64 நாறுகொன்றையுநாகமுந்திங்களும்
ஆறுஞ்செஞ்சடைவைத்தவமுதனார்

காறுகண்டத்தாகையதோகுலத்தா
புறதிறெட்டினாபாகூரடிகளே. (௩)
வெற்றியூருற்றைவேதியராவாகல
ஒற்றியேறுகந்தேறுமொருவனா
நெற்றிக்கணணினா நீளரவந்தனை
பற்றியாடவோபாகூரடிகளே. (௪) 54
மட்டவிழநதமலர்நெடுங்கணணிபால
இட்டவேடகையராகியிருபபவா
நட்டோலறியேனிவாசூழசசிமை
பட்டநெறறியாபாகூரடிகளே. (௫) 54
பலவிலோடுகையேநதிபபகலெலாம
எலவினறிடுபெய்பலியேறபவா
சொல்லிபபோயபபுகுமூரறியேன்சொலீர்
புல்குநீறறினாபாகூரடிகளே. (௬) 541
கட்டிவிட்டசடையாகபாலியா
எட்டிநோககிவநதிலபுகுநதவவவ
ரிட்டமாவறியேனிவா செயவன
பட்டநெற்றியாபாகூரடிகளே. (௭) 546
வேதமோதிவநதிலபுகுநதாரவா
காதிலவெணகுழைவைததகபாலியாா
நீதியொனறறியாாநிறைகொணடனா
பாதிவெணபிறைபபாகூரடிகளே. (௮) 546
சாமபறபூசுவாதாழ்சடைகடுவர்
ஓமபன்மூதெருதேறுமொருவனா
தேமபல்வெண்மதிசூடுவாதீயதோர்
பாமபுமாடவோ்பாகூரடிகளே. (௯) 547
மாலிலோடுமறையவன்றனுமாய
மேலுங்கீழுமளப்பரிதாயவ
ராலினீழலறமபகாந்தாமிகப்
பாலவெண்ணீற்றினா்பாகூரடிகளே. (௧௦) 547
திரியுமூவெயில்செஙகணை யொனறினால்
எரியவெய்தனோனுமிலங்கைககோ 547

னெரியவூன்றியிட்டார்விரலொன்றினாற்
பரியர்நுண்ணியர்பாசூரடிகளே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

தொண்டைநாட்டிலுள்ளது. சுவாமிபெயர் - பாசூர்நாதர் - தேவியார் - பசுபதிநாயகி.

ஆகப்பதிகம் - ௨௫.

திருவன்னியூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

73 காடுகொண்டரங்காகக்கங்குல்வாய்க்கணம்
பாடமாநடமாடும்பரமனார்
வாடமாநிறங்கொளவாமணங்கமழ்
மாடமாமதில்சூழ்வன்னியூரரே. (௧)

74 செங்கணாகமரையதுதீத்திர
ளங்கையேந்திநின்றாடொரியாடுவார்
கங்கைவார்சடைமேலிடங்கொண்டவர்
மங்கைபாகம்வைத்தார்வன்னியூரரே. (௨)

75 ஞானங்காட்டுவர்நன்னெறிகாட்டுவர்
தானங்காட்டுவர்தம்மடைந்தார்க்கெலாந்
தானங்காட்டித்தன்றாளடைந்தார்க்கு
வானங்காட்டுவார்போல்வன்னியூரரே. (௩)

76 இம்மையம்மையெனவிரண்டும்மிவை
மெய்ம்மைதானறியாதுவிளம்புவார்
மெய்ம்மையால்நினைவார்களதம்வல்வினை
வம்மின்றீர்ப்பர்கண்டீர்வன்னியூரரே. (௪)

77 பிறைகொள்வாணுதற்பெய்வளைதோளியர்
நிறையைக்கொள்பவர்நீறணிமேனியர்
கறைகொள்கண்டத்தர்வெண்மழுவாளினர்
மறைகொள்வாய்மொழியார்வன்னியூரரே. (௫)

78 திளைக்கும்வண்டொடுதேன்படுகொன்றையர்
துளைக்கைவேழத்தர்தோலர்சுடர்மதி
முளைக்குமூரற்கதிர்கண்டுநாகம்நா
வளைக்கும்வார்சடையார்வன்னியூரரே. (௬)

79 குணங்கடோளெட்டுமூர்த்திநினைபடி
பணங்குவார்கட்கினியனுமாய்நின்றான்

வணங்கிமாமலர்கொண்டவர்வைகலும்
வணங்குவார்மனத்தார்வன்னியூரரே. (௭)

இயலுமாலொடுநான்முகன்செய்தவ 54
முயலிற்காண்பரிதாயவிறைமூர்த்திதான்
அயலெலாமன்னமேயுமந்தாமரை
வயலெலாங்கயல்பாயவன்னியூரரே. (௮-௯)

நலங்கொள்பாகனைநன்றுமுனிந்திடா 54
விலங்கல்கோத்தெடுத்தாரதுமிக்கிட
விலங்கைமன்னனிருபதுதோளினை
மலங்கவூன்றிவைத்தார்வன்னியூரரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - உ௬.

---

திருஐயாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

சிந்தைவாய்தலுளான்வந்துசீரியன 54
பொந்துவார்புலால்வெண்டலைக்கையினன
முந்திவாய்தோமூவிலைவேல்பிடித்
தந்திவாய்தோபாம்பரையாறரே. (௧)

பாகமாலைமகிழ்ந்தனர்பான்மதி 54
போகவானையினீருரிபோர்த்தவர்
கோகமாலைகுலாயதோர்கொன்றையு
மாகவானெயஞ்சாடுமையாறரே. (௨)

நெஞ்சமென்பதோர்நீள்கயந்தன்னுளே 54
வஞ்சமென்பதோர்வான்சுழிப்பட்டுநான்
றுஞ்சும்போழ்துநின்னாமத்திருவெழுத்
தஞ்சுந்தோன்றவருளுமையாறரே. (௩)

நினைக்குநெஞ்சினுள்ளார்நெடுமாமதில் 54
அனைத்துமொள்ளழல்வாயெரியூட்டினார்
பனைக்கைவேழத்துரியுடல்போர்த்தவ
ரனைத்துவாய்தலுளாருமையாறரே. (௪)

பரியர்நுண்ணியர்பார்த்தற்கரியவர் 54
அரியபாடலராடலரன்றியும்

கரியகண்டத்தர்காட்சிபிறாகவெலாம்
அரியர்தொண்டர்கட்கெளியலாயாறரே. (௫)

87 புலரும்போதுமிலர்பட்டபொற்சுடர்
மலரும்போதுகளாற்பணியச்சிலர்
நிலருமபோதுமிலாததுமனறியும
அலரும்போதுமணியுமையாறரே. (௬)

88 பங்கமாலைகுழலியோர்பாலதிறக
கங்கைமாலையாககாதனமைசெயதவா
பூங்கமாலைமதியமுங்கண்ணியும
அங்கமாலையுஞ்சூடுமையாறரே. (௭)

89 முன்னையாறுமுயனறெழுவீரெலாம
பின்னையாறுபிரிவெனுமபேதைகாள
மன்னையாறுமருவியமாதவன
றன்னையாறுதொழததவமாகுமே. (௮)

90 ஆனையாறெனவாடுகின்றான்முடி
வானையாறுவளாயதுகாணமினோ
கானையாறுபுகசேறகவனினனருள
தேனையாறுதிறநதாலேயொகுமே. (௯)

91 அரககின்மேனியனநதனிரமேனியன
அரக்கின்சேவடியாளஞ்சவஞ்சலென
றரக்கனீரைந்துவாயுமலறவே
யரக்கினனடியாலுமையாறனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் - ௨௭.

திருஐயாறு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றமபலம

92 சிந்தைவண்ணததராய்த்திறம்பாவண
முந்திவண்ணததராய்முழுநீறணி
சந்திவண்ணததராய்த்தழல்போலவதோ
ரந்திவண்ணமுமாவனையாறரே. (௧)

93 மூலவண்ணத்தராய்முதலாகிய
கோலவண்ணத்தராகிக்கொழுஞ்சுடர்

நீலவண்ணத்தராகிநெடும்பளிங்
காலவண்ணத்தராவரையாறரே. (௨)

சிந்தைவண்ணமுந்தீயதோர்வண்ணமும்
அந்திப்போதழகாகியவண்ணமும்
பந்திக்காலனைப்பாய்ந்ததோர்வண்ணமும்
அந்திவண்ணமுமாவரையாறரே. (௩)

இருளின்வண்ணமுமேழிசைவண்ணமுஞ்
சுருளின்வண்ணமுஞ்சோதியின்வண்ணமும்
மருளுநான்முகன்மாலொடுவண்ணமும்
அருளுமவண்ணமுமாவரையாறரே. (௪)

இழுக்கின்வண்ணங்களாகியவெவ்வழல்
குழைக்குமவண்ணங்களாகியுங்கூடியு
மழைக்கண்மாமுகிலாகியவண்ணமும்
அழைக்குமவண்ணமுமாவரையாறரே. (௫)

இண்டைவண்ணமுமேழிசைவண்ணமுந்
தொண்டாவண்ணமுஞ்சோதியின்வண்ணமுங்
கண்டவண்ணங்களாய்க்கனலமாமணி
யண்டவண்ணமுமாவரையாறரே. (௬)

விரும்புமவண்ணமும்வேதத்தின்வண்ணமுங்
கரும்பினமென்மொழிக்காரிகைவண்ணமும்
விரும்புவாரவினைதீர்த்திடுமவண்ணமும்
அரும்பினவண்ணமுமாவரையாறரே. (௭)

ஊழிவண்ணமுமொண்சுடர்வண்ணமும்
வேழவீருரிபோர்த்ததோர்வண்ணமும்
வாழித்தீயுருவாகியவண்ணமும்
ஆழிவண்ணமுமாவரையாறரே. (௮)

செய்தவன்றிருநீறணிவண்ணமும்
எய்தநோக்கரிதாகியவண்ணமுங்
கைதுகாட்சியரியதோர்வண்ணமும்
ஐதுவண்ணமுமாவரையாறரே. (௯)

எடுத்தவாளரக்கன்றிறல்வண்ணமும்
இடர்கள்போற்பெரிதாகியவண்ணமுங்

கடுத்தகைந்நரம்பாலிசைவண்ணமு
மடுத்தவண்ணமுமாவரையாறரோ. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - செம்பொற்சோதீசுவரர் - தேவியார் - அறம்வளர்த்தநாயகி.

---

ஆறுபதிகம் - உ௮.

திருவாவடுதுறை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

நிறைக்கவாலியளல்லளிந்நேரிழை
மறைக்கவாலியளல்லளிம்மாதரார்
பிறைக்கவாலிபெரும்புனலாவடு
துறைக்கவாலியோடாடியசுண்ணமே. (௧)

தவளமாமதிச்சாயலோர்சந்திரன்
பிளவுசூடியபிஞ்ஞகனெம்மிறை
யளவுகண்டிலளாவடுதண்டுறைக்
களவுகண்டனளொத்தனளகன்னியே. (௨)

பாதிபெண்ணொருபாகத்தனபன்மறை
யோதியென்னுளங்கொண்டவனொண்பொரு
ளாதியாவடுதண்டுறைமேவிய
சோதியேசுடரேயென்றுசொல்லுமே. (௩)

கார்க்கொண்மாமுகில்போல்வதோர்கண்டத்தன்
வார்கொண்மென்முலைசேர்ந்திறுமாந்திவள
ஆர்க்கொள்கொன்றையனாவடுதண்டுறைத்
தார்க்குநின்றிவள்தாழுமாகாண்மினே. (௪)

கருகுகண்டத்தனகாய்கதிர்ச்சோதியன்
பருகுபாலமுதேயென்னும்பண்பினன்
அருகுசென்றிலளாவடுதண்டுறை
யொருவனென்னையுடையகோவென்னுமே. (௫)

குழலுங்கொன்றையுங்கூவிளமத்தமுந்
தழலுந்தையலோர்பாகமாத்தாங்கினன்
அழகனாவடுதண்டுறையாவெனக்
கழலுங்கைவளைகாரிகையாளுக்கே. (௬)

புஞ்சின்மெல்லடிப்பாவையோர்பங்கனைத்
தஞ்சமென்றிறுமாந்திவளாளாயும்

அஞ்சுவாளல்லளாவடுதண்டுறை
மஞ்சனேறடிவளாடியம்மையலே. (௭)
பிறையுஞ்சூடிநற்பெண்ணேடாணுகிய 55
நிறையுநெஞ்சமுநீரமையுங்கொணடவன
அறையுமபூமபொழிலாவடுதணடுறை
யிறைவனென்னையுடையவனென்னுமே. (௮)
வையநதானளநதானுமயனுமாய 55
மெயயைககாணலுறறாககழலாயின
னையனாவடுதண்டுறையாயெனக
கையிலவெளவளையுஙகழலகினறவே. (௯)
பககமபூதஙகளபாடபபலிகொளவான 55
மிககவாளரககனவலிவீடடினன
அககணிநதவனாவடுதண்டுறை
நககனெனனுமிடாணிலிகாணமினே. (௧0)

திருசசிறறமபலம

ஆக-பதிகம்-௨௬.

---

திருபபராயததுறை-திருக்குறுநதொகை.

திருசசிறறமபலம.

கரபபாகாலமடைநதவாதமவினை 55
சுருககுமாறுவலலாாகஙகைசெஞ்சடைப்
பரபபுநீாவருகாவிரிதெனகரைத
திருபபராயததுறைமேவியசெலவரே. (௧)
ஆடினாகளியானையினீருரி 551
பாடினாமறைநானகினேடாறஙகஞ்
சேடனாதெனபராயதுறைசசெலவனைத
தேடிககொண்டடியேன்சென்றுகாணபனே. (௨)
பட்டநெறறியாபானமதிககீற்றினா 551
நட்டமாடுவர்நள்ளிருளேமமுஞ்
சிட்டனார்தென்பராயத்துறைச்செல்வனா
இட்டமாயிருப்பாரையறிவரோ. (௩)
முன்பெலாஞ்சிலமோழைமைபேசுவா 551
என்பெலாம்பலபூண்டங்குழிதர்வார்
தென்பராய்த்துறைமேவியசெலவனை
அன்பராயிருபபாரையறிவரோ. (௪)

போதுதாதொடுகொண்டுபுனைநதுடன
தாதவிழ்சடைசசஙகரன்பாததது ள
வாதைதீர்ககவெனறேததிபபராயததுறைச
சோதியானைததொழுதெழுநதுய்ம்மினே. (ரு)

நலலகான்மறையோதியமபனைப
பலலிலவெண்டலையிறபலிகொள்வனைத
திலலையானறெனபராயததுறைச்செலவனை
வல்லையாயவணஙகித்தொழுவாயனமயே. (சு)

நெருபபினறகுவிததாலொககுநீளசடைப
பருபபதமதயானையுரிததவன
றிருப்பராயததுறையாா திருமார்பினூல
பொருபபராவியிழிபுனலபோனறதே. (எ)

வட்டவிட்டவிடுமணலெககாமேற
பட்டநுணடுளிபாயும்பராயததுறைச
சிட்டனசேவடிசெனறடைகிற்றிரேல்
விட்டுநமவினையுள்ளனவீடுமே. (அ)

நெருபபராணிமிாந்தாலொககுநீளசடை
மருப்பராவளைத்தாலொககுமவாண்மதி
திருபபராயததுறைமேவியசெல்வனா
விருப்பராயிருபபாராயறிவரோ. (கூ)

தொண்டுபோடியுநதாமலர்தூவியும
இண்டைகட்டியிணையடியேததியும
பண்டரஙகர்பராயத்துறைபபாஙகனாக
கண்டுகொணடடியேனுயநதுபோவனே. (கம)

அரககனறறலழிததவழகனைப
பரக்குநீர்ப்பொன்னிமன்னுபராயததுறை
யிருக்கைமேவியவீசனையேத்துமின்
பொருக்கநம்வினைபோயறுஙகாண்மினே. (கக)

திருசசிறறம்பலம

இதுசோழநாட்டிலுளளது.

சுவாமிபெயர் - திருபபராயததுறைநாதா - தேவியார் - பசமபொனமயிலமமை.

தேவாரப்பதிகம் - கO.

## திருவானைக்கா - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கோனைக்காவிக்குளிர்ந்தமனத்தராய்த்
தேனைக்காவியுண்ணார்சிலதெண்ணர்க
ளானைக்காவிலெம்மானையணைகிலா
ரூனைக்காவியுழிதர்வரூமரே. (க)

திருகுசிந்தையைத்தீர்த்துச்செம்மைசெய்து
பருகியூறலைப்பற்றிப்பதமறிந்
துருகிநைபவர்க்கூனமொன்றின்றியே
யருகுநின்றிடுமானைக்காவண்ணலே. (உ)

துன்பமின்றித்துயரின்றியென்றுநீர்
இன்பம்வேண்டிலிராப்பகலேத்துமின்
என்பொன்ஈசனிறைவனென்றுள்குவார்க்
கன்பனாயிடுமானைக்காவண்ணலே. (௩)

நாவானன்றுநறுமலர்ச்சேவடி
யோவாதேத்தியுள்ளத்தடைத்தார்வினை
காவாவென்றுதங்கைதொழுவார்க்கெலாம்
ஆவாவென்றிடுமானைக்காவண்ணலே. (௪)

வஞ்சமின்றிவணங்குமின்வைகலும்
வெஞ்சொலின்றிவிலகுமின்வீடுற
நைஞ்சுநைஞ்சுநின்றுள்குளிர்வார்க்கெலா
மஞ்சலென்றிடுமானைக்காவண்ணலே. (௫)

நடையைமெய்யென்றுநாத்திகம்பேசாதே
படைகள்போல்வருமஞ்சமாபூதங்கள்
தடையொன்றின்றியேதன்னடைந்தார்க்கெலாம்
அடையநின்றிடுமானைக்காவண்ணலே. (௬)

ஒழுகுமாடத்துளொன்பதுவாய்தலுங்
கழ்கரிப்பதன்முன்னங்கழலடி
தொழுதுகைகளாற்றூமலர்தூவிநின்
றழுமவர்க்கன்பனானைக்காவண்ணலே. (௭)

உருளும்போதறிவுண்ணாவுலகத்தீர்
தெருளுஞ்சிக்கெனத்தீவினைசேராதே

யிருளறுத்துநின்றீசனென்பார்க்கெலாம்
அருள்கொடுத்திடுமானைக்காவண்ணலே. (௮)

1 நேசமாகிநினைமடநெஞ்சமே
நாசமாயகுலநலஞ்சுற்றங்கள்
பாசமற்றுப்பராபரவானந்த
வாசையுற்றிடுமானைக்காவண்ணலே. (௯)

2 ஓதமாகடல்சூழிலங்கைக்கிறை
கீதங்கின்னரம்பாடக்கெழுவினான்
பாதம்வாங்கிப்பரிந்தருள்செய்தங்கோ
ராதியாயிடுமானைக்காவண்ணலே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் — சம்புகேசுவரர். தேவியார் — அகிலாண்டநாயகியம்மை.

ஆகப்பதிகம் — ௯௧

---

திருப்பூந்துருத்தி - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்

3 கொடிகொள்செல்வவிழாக்குணலையறாக்
கடிகொள்பூம்பொழிற்கச்சியேகம்பனார்
பொடிகள்பூசியபூந்துருத்திநக
ரடிகள்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௧)

4 ஆர்த்ததோலுடைகட்டியோர்வேடனாய்ப்
பார்த்தனோடுபடைதொடுமோகிலும்
பூத்தநீள்பொழிற்பூந்துருத்திநகாத்
தீர்த்தனசேவடிக்கீழ்நாமிருப்பதே. (௨)

5 மாதினைமதித்தாரொருபாகமாக்
காதலாற்கரந்தான்சடைக்கங்கையைப்
பூதநாயகன்பூந்துருத்திநகாக்
காதிசேவடிக்கீழ்நாமிருப்பதே. (௩)

6 மூவனாய்முதலாயிவ்வுலகெலாங்
காவனாய்க்கடுங்காலனைக்காய்ந்தவன்
பூவிநாயகன்பூந்துருத்திநகர்த்
தேவன்சேவடிக்கீழ்நாமிருப்பதே. (௪)

செம்பொனேயொக்குமேனியன்றேசத்தில் 552
உம்பராரவரோடங்கிருக்கிலும
பொன்பொனார்செல்வப்பூந்துருத்திநகர
நம்பன்சேவடிக்கீழநாமிருப்பதே. (௫)

வல்லமபேசிவலிசெயமூன்றூரினைக் 553
கொல்லமபேசிகொடுஞ்சரநூறினான்
புல்லம்பேசியும்பூந்துருத்திநகர்ச்
செல்வன்சேவடிக்கீழநாமிருப்பதே. (௬)

ஒருத்தனையுலகேழுந்தொழநின்று 553
பருத்தபாம்பொடுபானமதிகங்கையும்
பொருத்தனைகிலும்பூந்துருத்திநகாத
திருத்தன்சேவடிக்கீழநாமிருப்பதே. (௭)

அதிரர்தேவரியக்கர்விச்சாதரா 554
கருதநின்றவாகாணபரிதாயினான்
பொருதநீரவரும்பூந்துருத்திநகர்ச
சதிரனசேவடிக்கீழ்நாமிருப்பதே. (௮)

செதுகருமனத்தார்புறங்கூறினுங் 554
கொதுகருக்கணணிவேனைபிகள்கூறினும
பொதுவினையகன்பூந்துருத்திநகாக
கதிபன்சேவடிக்கீழநாமிருப்பதே. (௯)

துடித்ததோள்வலிவாளரக்கனறனைப 554
பிடித்தகைஞ்ஞொரிந்துறறனகணனைலாம
பொடிக்கலூனறியபூந்துருத்திநகாப
படிகொளசேவடிக்கீழநாமிருப்பதே. (௧௦)

திருச்சிற்றம்பலம

இதுசோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயா - புஷ்பவனநாதா - தேவியாா - அழகாலமாந்தாாயகி.

ஆகப்பதிகம் - ௧௨.

---

திருச்சோற்றுத்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கொல்லையேற்றினர்கோளரவத்தினர் 554
தில்லைச்சிற்றம்பலத்துறைசெல்வனார்

தொல்லையூழியர்சோற்றுத்துறையர்க்கே
வல்லையாயப்பணிசெய்மடநெஞ்சமே. (௪)

544 முத்தியாகவொருதவஞ்செய்திலை
யத்தியாலடியார்க்கொன்றளித்திலை
தொத்தினலர்சோற்றுத்துறையர்க்கே
பத்தியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (௫)

545 ஒட்டிநின்றவுடலுறுநோய்வினைக்
கட்டிநின்றகழித்தவைபோயறத்
தொட்டுநின்றுமச்சோற்றுத்துறையர்க்கே
பட்டியாயப்பணிசெய்மடநெஞ்சமே. (௬)

546 ஆதியானண்டவாணர்க்கருணல்கு
நீதியானென்றுநின்மலனேயென்று
சோதியானென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
வாதியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (௭)

547 ஆட்டினாயடியேன்வினையாயின
வோட்டினாயொருகாதிலிலங்குவெண்
தோட்டினாயென்றுசோற்றுத்துறையர்க்கே
நீட்டிநீபணிசெய்மடநெஞ்சமே. (௮)

548 பொங்கினின்றெழுந்தகடனஞ்சினைப்
பங்கியுண்டதோர்தெய்வமுண்டோசொலாய்
தொங்கினீயென்றுசோற்றுத்துறையர்க்குத்
தங்கிநீபணிசெய்மடநெஞ்சமே. (௯)

549 ஆணிபோலநீயாற்றவலியைகாண்
ஏணிபோலிழிந்தேறியுமேங்கியுஞ்
தோணியாகியசோற்றுத்துறையர்க்கே
பூணியாய்ப்பணிசெய்மடநெஞ்சமே. (௰)

550 பெற்றமேறிலெனபேய்ப்படையாகிலென்
புற்றிலாடரவேயதுபூணிலென்
சுற்றிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
பற்றிநீபணிசெய்மடநெஞ்சமே. (௧௧)

551 அல்லியானரவைத்தலைநாணைப்
பள்ளியானறியாதபரிசெலாஞ்

சொல்லிநீயென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
புல்கிநீபணிசெய்மடநெஞ்சமே. (௯)

மிண்டரோடுவிரவியும்வீறிலாக 5552
குண்டர்தம்மைக்கழித்துய்யப்போந்துநீ
தொண்டுசெய்தென்றுஞ்சோற்றுத்துறையர்க்கே
புண்டுநீபணிசெய்மடநெஞ்சமே. (௧௦)

வாழ்ந்தவன்வலிவாளரக்கனை 5553
யாழ்ந்துபோயலறவ்விரலூன்றினான்
சூழ்ந்தபாரிடஞ்சோற்றுத்துறையர்க்குத்
தாழ்ந்துநீபணிசெய்மடநெஞ்சமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.
இதுசோழநாட்டிலுள்ளது.
சுவாமிபெயர் - தொலையாச்செல்வர் - தேவியார் - ஒப்பிலாம்பிகையம்மை.
ஆகப்பதிகம் - ௧௧.

---

திருநெய்த்தானம் - திருக்குறுந்தொகை.
திருச்சிற்றம்பலம்.

கொல்லியான்குளிர்தூங்குகுன்றத்தான் 5554
புல்லியார்புரமூன்றெரிசெய்தவ
னெல்லியானிலையானெய்த்தானனைச்
சொல்லிமெய்தொழுவார்சுடர்வாணரே. (௧)

இரவனையிடுவெண்டலையேந்தியைப் 5555
பரவனைப்படையார்மதின்மூன்றையு
மிரவனைநிலையானெய்த்தானனைக்
குரவனைத்தொழுவார்கொடிவாணரே. (௨)

ஆனிடையைந்துமாடுவராரிருட் 5556
கானிடைநடமாடுவர்காண்மினோ
தேனிடைமலர்பாய்நெய்த்தானனை
வானிடைத்தொழுவார்வலிவாணரே. (௩)

விண்டவர்புரமூன்றும்வெண்ணீறெழக் 5557
கண்டவன்கடிதாகியநஞ்சினை
யுண்டவனொளியானெய்த்தானனைத்
தொண்டராய்த்தொழுவார்சுடர்வாணரே. (௪)

முன்கைநோவக்கடைந்தவர்நிற்கவே 5558
சங்கியாதுசமுத்திரஞ்சுண்டா

னங்கையோடுநவின்றநெய்த்தானனைத்
தங்கையாற்றொழுவார்தலைவாணரே. (௫)

5559 சுட்டநீறுமெய்பூசிச்சுடலையுள
நட்டமாடுவர்நள்ளிருட்பேயொடே
சிட்டர்வானவர்தேருநெய்த்தானனை
யிட்டமாய்த்தொழுவாரின்பவாணரே. (௬)

5560 கொள்ளித்தீயெரிவீசிக்கொடியதோர்
கள்ளிக்காட்டிடையாடுவர்காண்மினோ
தெள்ளித்தேறித்தெளிந்துநெய்த்தானனை
யுள்ளத்தாற்றொழுவாருமபாவாணரே. (௭)

5561 உச்சிமேல்விளங்குமிளவெண்பிறை
பற்றியாடரவோடுஞ்சடைப்பெய்தான்
நெற்றியாரழற்கண்டநெய்த்தானனைச்
சுற்றிமெய்த்தொழுவார்சுடர்வாணரே. (௮)

5562 மாலொடும்மற்றையோனுயர்நான்முகன்
காலொடும்முடிகாண்பரிதாயினான்
சேலொடுஞ்செருச்செய்யுநெய்த்தானனை
மாலொடுந்தொழுவார்வினைவாடுமே. (௯)

5563 வலிந்ததோள்வலிவாளரக்கன்றனை
நெருங்கநீள்வரையூன்றுநெய்த்தானனா
புரிந்துகைந்நரம்போடிசைபாடலும
பரிந்தனைப்பணிவாரவினைபாறுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - நெய்யாடியப்பர் - தேவியார் - பாலாம்பிகையம்மை.

ஆகப்பதிகம் - ௩௪.

திருப்பழனம் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

5564 அருவனாயத்தியீருரிபோர்த்துமை
யுருவனாயொற்றியூர்பதியாகிலும்
பருவரால்வயல்சூழ்ந்தபழனத்தான்
றிருவினாற்றிருவேண்டுமித்தேவர்க்கே. (௧)

5565 வையம்வந்துவணங்கிவலங்கொளும்
ஐயனையறியார்சிலராதர்கள்

மைப்கொளாட்ரவார்த்தபழனன்பாற்
பொயயர்காலங்கள்போககிடுவார்களே. (௨)

வண்ணமாகமுறுக்கியவாசிகை 5566
திண்ணமாகததிருசசடைச்சேர்த்தியே
பண்ணுமாகவேபாடுமபழனததான்
எண்ணுநீரவனுயிரநாமமே. (௩)

ஆககபபாமபுபிடிததது௵சசிட 5567
வாககபபாமபினைககணடதுணிமதி
பாககப்பாம்பினைபபறறுமபழனததான
தார்ககொண்மாலைசடைககரநதிட்டதே. (௪)

நீலமுண்டமிடற்றினனோநதநோர் 5568
கோலமுண்டகுணததால்நிறைநததோர்
பாலுமுண்டுபழனனபாலெனனிடை
மாலுமுண்டிறையென்றனமனததுளே. (௫)

மநதமாகவளாபிறைசூடியோர் 5569
சநதமாகததிருசசடைசசாததுவான
பநதமாயினதீர்ககுமபழனததான
எந்தைதாயதந்தையெமபெருமானுமே. (௬)

மார்க்கமொன்றறியாமதியில்லிகள 5570
பூக்கரததிற்புரிகிலாமூடாகள
பார்ககநின்றுபரவுமபழனத்தான்
தாட்கணின்றுதலைவணஙகார்களே. (௭)

ஏறினரிமையோாகள்பணிகணடு 5571
தேறுவாரலாதீவினையாளாகள
பாறினாபணிவேண்டுபழனததான்
கூறினனுமையாளொடுஙகூடவே. (௮)

சுற்றுவார்தொழுவார்சுடாவண்ணன்மேல 5572
தெற்றினர் திரியும்புரமூன்றெயதான்
பற்றினார்வினைதீர்க்கும்பழனனை
வெற்றினன்மரக்கேனெம்பிரானையே. (௯)

பொங்குமாகடலசூழிலங்கைக்கிறை 5573
யங்கமானவிறுத்தருள்செயதவன்

பங்கனென்றும்பழனனுமையொடுந்
தங்கனூனடியேனுடையுசசியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இதுசோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - ஆபத்சகாயர் - தேவியார் - பெரியநாயகியம்மை.

ஆகபபதிகம் - ௧௬.

திருச்செம்பொன்பள்ளி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

574 கானறுத்தடிபொழிலவண்டினந்
தேனறுத்திருச்செம்பொன்பள்ளியான
ஊனறுத்தோர்வெண்டலையுட்பலி
தானறுத்தோர்கொள்கையனகாண்மினே. (௧)

575 என்புமாமையுமபூண்டங்குழ்தாவர்க்
கன்புமாயிடுமாயிழையீர்னிச
செம்பொன்பள்ளியுளான்சிவலோகனே
நம்பொன்பள்ளியுள்கவினைநாசமே. (௨)

576 வேறுகோலத்தராணலர்பெண்ணலா
ரீறுகோவணவைந்துகிலாடையர்
தேறலாவதொன்றன்றுசெம்பொன்பள்ளி
யாறுகுடியவண்ணலவனேயே. (௩)

577 அருவராததோர்வெண்டலையேந்திவந்
திருவராயிடுவார்கடைதேடுவர்
தெருவெலாமுழலவார்செம்பொன்பள்ளியார
ஒருவாதாம்பலபேருளர்காணமினே. (௪)

578 பூவுலாஞ்சடைமேற்புனலசூடினான்
ஏவலாலெயின்மூன்றுமெரித்தவன்
தேவர்சென்றிறைஞ்சுஞ்செம்பொன்பள்ளியான்
மூவராயமுதலாயினறமூர்த்தியே. (௫)

579 சலவராயொருபாம்பொடுதண்மதி
கலவராவதின்காரணமெனகொலோ
திலதநீண்முடியார்செம்பொன்பள்ளியார்
குலவிலாலெயில்மூனறெய்தகூத்தரே. (௬)

580 கைகொள்சூலத்தர்கட்டுவாங்கத்தினர்
மைகொள்கண்டத்தராகியருகடர்

செய்யமேனி வெண்ணீற்றர் செம்பொன்பள்ளி
ஐயா கையதோரா டலநாகமே. (௭)

வெங்கணாகம் வெருவுறவார்த்தவர் 555?
பைங்கணானையினுரிபோர்த்தவர்
செங்கணமால்விடையார் செம்பொன்பள்ளியார்
அங்கணையடைந்தார் வினைதீர்ப்பரே. (௮)

நன்றிநாரணனு நான்முகனென்றிவர் 555?
நின்றநீண்முடியோடடிகாணப்புறுச்
சென்றுகாணபரியான செம்பொன்பள்ளியான்
நின்றசூழலினீளெரியாகியே. (௯)

திரியுமும்மதில் செங்கணையொன்றினால்
எரியவெய்தவன்மேலொட்டியிலங்கைக்கோன்
நெரியவூன்றியிட்டார் செம்பொன்பள்ளியார்
அரியவானமவரருள்செய்வரே (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது

சுவாமிபெயர் - சொர்ணபுரீசர் - தேவியார் - சுகந்தவனநாயகி.

---

ஆகப்பதிகம் - ௧௭

திருக்கடவூர் - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

மலைக்கொளானைமயக்கியவல்வினை 555?
நிலைக்கொளானைநினைப்புறுநெஞ்சமே
கொலைக்கையானையுங்கொன்றிடுமாதலால்
கலைக்கையானைகண்டீர்கடவூரரே. (௧)

வெள்ளிமால்வரைபோல்வதோரானையார் 5565
உள்ளவாறெனையுள்புகுமானையார்
கொள்ளமாகியகோயிலுளானையார்
கள்ளவானைகண்டீர்கடவூரரே. (௨)

ஞானமாகியநன்குணரானையார் 5566
ஊனைவேவவுருக்கியவானையார்
வேனலானையுரித்துமையஞ்சவே
கானலானைகண்டீர்கடவூரரே. (௩)

ஆலமுண்டழகாயதோரானையார் 5567
நீலமேனிநெடும்பளிங்கானையார்

கோல்மாயகொழுஞ்சுடரானையார்
காலவானைகண்டாகடவூரே. (ச)

5588 அளித்தவானஞ்சுமாடியவானையார
வெளுத்தநீள்கொடியேறுடையானையார
எளிதத்வேழத்தையெள்குவித்தானையார்
களித்தவானைகணடாகடவூரே. (ரு)

5589 விடுத்தமால்வரைவிண்ணுறவானையார
தொடுத்தமாலவரை தாயதோரானையார
கடுத்தகாலனைககாய்ந்ததோரானையார
கடுத்தவானைகண்டீர்கடவூரே. (சு)

5590 மண்ணுளாரைமயக்குறுமானையார
எண்ணுளார்பலரோததிடுமானையார
விண்ணுளார்பலருமறியானையார்
கண்ணுளானைகண்டா கடவூரே. (எ)

5591 சினககுஞ்செம்பவளத்திரளானையார
மனக்கும்வலவினைதீாததிடுமானையார
அனைககுமன்புடையாாமனத்தானையார்
கனைக்குமானைகண்டீர்கடவூரே. (அ)

5592 வேதமாகியவெஞ்சுடரானையார
நீதியால்நிலனாகியவானையார்
ஓதிஊழிதெரிந்துணரானையார்
காதலானைகண்டீர்கடவூரே. (கூ)

5593 நீண்டமாலொடுநான்முகனாறுமாய்க்
காண்டுமென்றுபுககார்களிருவரும்
மாண்டவாரழலாகியவானையார
நீண்டலானைகண்டீர்கடவூரே. (க0)

5594 அடுத்துவந்தவிலங்கையர்மன்னனை
யெடுத்ததோள்களிறநெரித்தானையார்
கடுத்தகாலனைக்காயந்ததோரானையார்
கடுக்கையானைகண்டீர்கடவூரே. (கக)

திருச்சிற்றம்பலம். ஆகப்பதிகம் - கஎ.

இது - சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - அமிர்தகடேசுவரர். தேவியார் - அபிராமியம்மை.

திருககடவூரமயானம - திருக்குறுநதொகை,

திருசசிறறமபலம.

குழைகொள்காதினர்கோவணவாடையர் 559
உழையர்தாஙகடவூரின்மயானததார
பழையதம்மடியார்செயயுமபாவமும்
பிழையுந்தீர்ப்பர்பெருமானடிகளே. (க)

உன்னிவானவரோதியசிந்தையிற 559
கன்னலதேனகடவூரின்மயானததார
தன்னைநோககிததொழுதெழுவார்க்கெலாம
பின்னையென்றார்பெருமானடிகளே. (உ)

சூலமேநதுவர்தோலுடையாடையர 559
ஆலமுணடமுதேமிககதேககுவர
காலகாலர் *கடவூர்மயானததார
மாலைமார்பர்பெருமானடிகளே. (ங)

இறைவனரிமையோர்தொழுபைஙகழல் 559
மறவனாகடவூரின்மயானததா
அறவனாரடியாரடியார்தஙகள்
பிறவிதீர்ப்பர்பெருமானடிகளே. (ச)

கத்துகாளிகதநதணிவிததவர் 559
மததர்தாஙகடவூரினமயானததார்
ஒத்தொவவாதனசெயதுழலவாரொரு
பிததர்காணும்பெருமானடிகளே. (ரு)

எரிகொள்மேனியிளமபிறைவைததவர் 5600
கரியர்தாஙகடவூரினமயானததா
அரியரண்டததுளோரயனமாலுக்கும்
பெரியர்காணுமபெருமானடிகளே. (சு)

அணஙகுபாகததராரணநானமறை 5601
கணங்கொள்சோகடவூரினமயான ததார
வணங்குவாரிடர்தீர்ப்பாரமயககுறும
பிணங்கொள்காடர்பெருமானடிகளே, (எ)

அரவுகையினராதிபுராணனார் 5602
மரவுசேர்கடவூரினமயானததார்

---

* கடவூரின மயானததார - எனபதும் பாடம், ஆயின்அது குறுநதொகையடி - எல்லைகட ந்து நிற்பது.

பரவுவாரிடர்தீர்ப்பர்பணிகொள்வர்
பிரமன்மாற்கும்பெருமானடிகளே. (அ-கூ-௧0)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பிரமபுரீசுவரர் - தேவியார் - மலர்க்குழன்மின்னம்மை.

---

ஆசப்பதிகம் - ௧அ

திருமயிலாடுதுறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

5603 கொள்ளுங்காதன்மைபெய்துறுங்கோல்வளை
புள்ளுமுள்கியுரைக்குந்திருப்பெயா
வள்ளன்மாமயிலாடுதுறையுறை
வெள்ளந்தாங்குசடையனைவேண்டியே. (௧)

5604 சித்தந்தேவர்கள்செறிவலர்சிக்கெனும்
பச்சைநீறுமெனப்பைங்கொடியன்மதி
வைத்தமாமயிலாடுதுறையனை
கொத்தினிற்பொலிகொன்றைகொடுக்கிலே. (௨)

5605 அண்டர்வாழ்வுமமரரிருக்கையுங்
கண்டுவீற்றிருக்குங்கருத்தொன்றிலோம்
வண்டுசேர்மயிலாடுதுறையரன்
தொண்டர்பாதங்கள்சூடித்துதையிலே. (௩)

5606 வெஞ்சினக்கடுங்காலன்விரைகிலான்
அஞ்சிறப்பும்பிறப்புமறுக்கலாம்
மஞ்சன்மாமயிலாடுதுறையுறை
பஞ்சின்மெல்லாளுமைபங்கனருளிலே. (௪)

5607 குறைவிலோங்கொடுமானிடவாழ்க்கையாற்
கறைநிலாவியகண்டனெண்டோளினன்
மறைவலான்மயிலாடுதுறையுறை
யிறைவனீள்கழலேத்தியிருக்கிலே. (௫)

5608 நிலைமைசொல்லுநெஞ்சேதவமென்செய்தாய
கலைகளாயவல்லான்கயிலாயநன்
மலையன்மாமயிலாடுதுறையனந்
தலையின்மேலுமனத்துளுந்தங்கவே. (௬)

5609 நீற்றினனிமிர்புன்சடையான்விடை
யேற்றினனமையாளுடையான்புலன்

மாற்றினன்மயிலாடுதுறையென்று
போற்றுவார்க்குமுண்டோபுவிவாழ்க்கையே. (௭)

கோலும்புல்லுமொருகையிற்கூர்ச்சமுந்
தோலும்பூண்டுதுயரமுற்றெனைப்பயன்
நீலமாமயிலாடுதுறையனை
நூலும்வேண்டுமோநுண்ணுணர்ந்தோர்கட்கே. (௮)

பணங்கொளாடரவல்குற்பகீரதி
மணங்கொள்சடைவைத்தமறையவன்
வணங்குமாமயிலாடுதுறையரன்
அணங்கோர்பாலகொண்டகோலமழகிதே. (௯)

நீணிலாவரவச்சடைநேசனைப்
பேணிலாதவர்பேதுறவோட்டினேம்
வாணிலாமயிலாடுதுறைதனைக்
காணிலார்கருங்கடுந்துயரில்லையே. (௧௦)

பருத்ததோளும்முடியும்பொடிபட
இருத்தினானவனின்னிசைகேட்டலும்
வருத்தினான்மயிலாடுதுறைதொழும்
கருத்தினார்வினைகட்டறுங்காண்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - மாயூரநாதர் - தேவியார் - அஞ்சொலாயகி.

---

ஆசப்பதிகம் - ௬௧.

திருக்கழிப்பாலை - திருக்குறுந்தொகை

திருச்சிற்றம்பலம்.

வண்ணமும்வடிவுஞ்சென்றுகண்டிலள்
எண்ணிநாமங்களேத்திநிறைந்திலள்
கண்ணுலம்பொழில்சூழ்கழிப்பாலையெம்
மண்ணலேயறிவானிவடன்மையே. (௧)

மருந்துவானவருய்யநஞ்சுண்டுகந்
திருந்தவன்கழிப்பாலையுளெம்பிரான்
இருந்துசேவடிசிந்தையுள்வைத்திவள்
பரிந்துரைக்கிலுமென்சொற்பழிக்குமே. (௨)

மழலைதானவரச்சொற்றெரிகின்றிலள்
குழலினேர்மொழிகூறியகேண்மினோ

அழகனைக்கழிப்பாலையெம்மண்ணலை
நிகழ்வதேதாவெனையென்றுகொளென்னுமே. (௫)

517 செய்யமேனிவெண்ணீறணிவான்றனை
மையலாகிமதிக்கிலளாரையுங்
கைகொள்வெண்மழுவன்கழிப்பாலையெம்
ஐயனையறிவாளிவடன்னமையே. (௬)

518 கருத்தனைக்கழிப்பாலையுண்மேவிய
வொருத்தனையுமையாளொருபங்கனை
யருத்தியாற்சென்றுகண்டிடவேண்டுமென்
றொருத்தியாருளமுசலதாடுமே. (௭)

19 கங்கையைச்சடைவைத்துமலைமகள்
நங்கையையுடனேவைத்தநாதனார்
திங்கள்சூடிதிருக்கழிப்பாலையான்
இங்குவந்திடுமென்றிறுமாக்குமே. (௮)

20 ஐயனேயழகேயனலேந்திய
கையனேகறைசேர்தருகண்டனே
மையுலாம்பொழில்சூழ்கழிப்பாலையெம்
ஐயனேவிதியேயருளெனனுமே. (௭)

21 பத்தர்கட்கமுதாயபரத்தினை
முத்தனைமுடிவொன்றிலாமூர்த்தியை
யத்தனையணியார்கழிப்பாலையெஞ்
சித்தனைச்சென்றுசேருமாசெப்புமே. (௮-௯)

22 பொன்செய்மாமுடிவாளரக்கன்றலை
யைஞ்சுநான்குமொன்றுமிறுத்தானவன்
என்செயான்கழிப்பாலையுளெம்பிரான்
துஞ்சும்போதுந்துணையெனலாகுமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது.

சுவாமிபெயர் - பல்வண்ணநாதர் - தேவியார் - வேதநாயகியம்மை.

ஆசைப்பதிகம் - ௯௦.

## திருப்பைஞ்ஞீலி - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

23 மத்தமாமலர்சூடியமைந்தனார்
சித்தராய்த்திரிவார்வினைதீர்ப்பரால்

### திருவாரூர்-திருத்தாண்டகம்.

### திருச்சிற்றம்பலம்.

உயிராவணமிருந்துற்றுநோக்கி யுள்ளக்கிழியினுருவெழுதி,யுயிரா 6484
வணஞ்செய்திட்டுன்கைத்தந்தாலுணரப்படுவாரோடொட்டிவாழ்தி, ய
யிராவணமேறாதானேறேறியமரர்நாட்டாளாதேயாரூராண்ட, அயிராவ
ணமே யென்னம்மானேநின்னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே. (௧)

எழுதுகொடியிடையாரேழைமென்றோ ளிளையவர்கணம்மையிக 6485
ழாமுன்னம், பழுதுபடநினையேல்பாவிநெஞ்சே பண்டுதானென்னோ
டுபகைதானுண்டோ, முழுதுலகிலவானவர்கண் முறைமுறைகூடிமுடியா
லுறவணங்கிமுற்றம்பற்றி, யழுதுதிருவடிக்கேபூசைசெய்யவிருக்கின
ஞனாரபோலு மாரூரதானே. (௨)

தேரூரார்மாவூராதிங்களூராதிகழ்புன் சடைமுடிமேற்றிங்களசூ 6486
டிக, காரூராநின்றகழனிச்சாயற் கண்ணார்ந்தமாடங்கலந்துதோன்று
மோரூராவுலகெலாமொப்பக்கூடி யுமையாண மணவாளாவென்றுவா
ழ்த்தி, யாரூராவாரூராவென்கின்றாக ளமரர்கடம்பெருமானேயெங்
குற்றாயே. (௩)

கோவணமோதோலோவுடையாவது கொலலேறோவேறுமோலூ 6487
ரவதுதான, பூவணமோபுறம்பயமோவன்றியிறன்ன பொருந்தாதார்
வாழ்க்கைதிருந்தாமையோ, தீவணத்தசெஞ்சடைமேற்றிங்கள்சூடித்
திசைநானகுமவைத்துகந்தசெந்தீவண்ண, ராவணமோவொற்றியோ
வமமானார்தா மறியேன்மற்றூராமாரூரதானே. (௪)

ஏந்துமழுவாளரின்னம்பரா ரெரிபவளவண்ணர்குடமூக்கிலார் 6488
வாய்ந்தவளைக்கையாள்பாகமாக வார்சடையாரவந்துவலஞ்சுழியார
போந்தாரடிகள்புறம்பயத்தே புகலூர்க்கேபோயினார்போரேறேறி
யாய்ந்தேயிருப்பார்போயாரூர்புக்கா ரண்ணலாசெய்கின்றகணமாய
மே. (௫)

கருவாகிக்குழம்பிருந்துகலித்துமூளை கருநரம்பும்வெள்ளெலும்புஞ் 6489
சேர்ந்தொன்றாகி, யுருவாகிப்புறப்பட்டிங்கொருத்திதன்னால் வளர்க்கப்
பட் டுயிராருங்கடைபோகாரான், மருவாகி நின்னடியே மறவேனம
மான் மறித்தொருகாற்பிறப்புண்டேன் மறவாவண்ணந், திருவாரூர்ம
ணவாளாதிருத்தெங்கூராசெம்பொனேகம்பனேதிகைத்திட்டேனே. ()

முன்னமவனுடையநாமங்கேட்டாள் மூர்த்தியவனிருக்கும்வண் 6490
ணங்கேட்டாள், பின்னையவனுடையவாரூர்கேட்டாள் பெயர்த்துமவ

னுக்கேபிச்சியானை, என்னையுமத்தனையுமன்றேசேர்த்தா னைகன்றுனை
கலிட்டத்தாராசாரத்தைத், தன்னைமறந்தாடன்னுமங்கெட்டாடலைப்பட்
டாணங்கைத்தலைவன்றுனே. (எ)

491 ஆடுவாயநீநட்டமளவிற்குன்று வலியடுவாரருமறையோரறிந்தே
னுன்னைப், பாடுவாதுமபுரும்நாரதாதி பரவுவாரமரர்களுமமரர்கோ
னும், தேடுவார்திருமாலு நான்முகனுந் நீண்டுவாளமலைமகளுங்கங்கை
யாளுநு, கூடுமேநாயடியேனசெய்குற்றேவல குறையுண்டேதிருவா
ரூராமுடிகொண்டீர்க்கே. (அ)

492 நீருருவுசெஞ்சடையாயநெற்றிக்கண்ணாய நிலாத்திங்கட்டுண்டத்
தாயமின்னைத்தேடி, யோருருமொழியாமேயொற்றித்தெங்கு மூலக
மெலாந்திரிதந்துமினைகாணபான, றேருருநெடுவீதிபறறிநின்றுதிரு
மாலுநானமுகனுந்தேர்ந்துங்காணு, தாரூராவாரூராவெனகின்றார்களம
ரர்கடம்பெருமானேயாரூராயே. (௯)

493 நல்லூரோனனறுகநட்டமிடடு நறையேறறைப்பழையாறேபாயவே
றிப, பலவூரும்பலிதிரிந்துசேறறூர்மீதே பலர்காணத்தலையாலங்காட
டினூடே யிலலாதபெருவேளூர்த்தளியேபேணி யிராபபட்டீச்சரங்
கடந்துமணற்கால்புக, கெலலாருந்தனிச்சாத்தங்குடியிற்காணவிறைப
பொழுதிற்றிருவாரூர்புக்கார்தாமே. (௧௦)

494 கருத்துத்திககதநாகங்கையிலேநதிக கருவரைபோறகளியானைகதற
க்கையா, லுரித்தெடுத்துசிவநததன்றோலபொருந்தமூடி யுமையவளை
யச்சுறுத்துமொளிகொண்மேனித, திருத்துருத்தித்திருப்பழனந்திருநெய
த்தானந் திருவையாறிடங்கொண்டசெல்வரின்னா, ளிரிபெருத்தவெள
ளேற்றையடரவேறி யப்பனாரிப்பருவமாரூராரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகபதிகம் - ௨௫

திருவாரூர் - திருத்தாண்டகம்,

திருச்சிற்றம்பலம்

495 பாதித்தன் றிருவுருவிற்பெண்கொண்டானைப் பண்டொருகாற்றச
முகனையழுவித்தானை, வாதித்துத்தடமலரான்சிரங்கொண்டானை வண்
கருப்புச்சிலைக்காமனுடல்கொண்டானைச், சோதிச்சந்திரன்மேனிமறு
ச்செய்தானைச் சுடரங்கிதேவனையோர்கைக்கொண்டானை, யாதித்தன்
பற்கொண்டவம்மான்றன்னையாரூரிற்கண்டடியேனுய்ந்தவாறே. (௧)

496 வெற்புறுத்ததிருவடியாற்கூற்றட்டானை விளக்கினொளிமின்னினொ
ளிமுத்தின்சோதி, யொப்புறுத்ததிருவுருவத்தொருவன்றன்னை யோதா

தேவேதமுணர்ந்தான்றன்னை, யப்புறத்தகடனஞ்சமுண்டான்றன்னை, ய
முதுண்டாருலந்தாலுமுலவாதானை, யப்புறத்தீரகத்தேயழலானானை
யாரூரிற்கண்டடியேனயாத்தவாறே. (௨)

ஒருகாலத்தொருதேவர்கணைகொண்டானை, யூழிதோறூழியுயர்ந்தா 497
னறன்னை, வருகாலஞ்செல்காலமாயினானை வணசருப்புசசிலக்சாமனு
டலட்டானைப், பொருவேழக்களிறுரிவைப்போர்வையானைப், புள்ள
ையனுடறன்னைப்பொடிசெய்தானை, யருவேளவிதகாதசெசசன்றலை
கொண்டானை யாரூரிற்கண்டடியேனயாத்தவாறே. (௩)

மெய்ப்பாலவெண்ணீறணிந்தமேனியானை வெண்பளிங்கினுடப 498
தித்தசோதியானை, பொய்ப்பானைப்பொய்யிலாவொருவனறன்னை யுத்தம
னைநித்திலத்தையுலகமெல்லாம், வைப்பானைக்களைவானைவருவிப்பானை
வல்வினையேனமனத்தகத்தேமன்னினானை, யப்பாலைக்கப்பாலைக்கப்பா
லானை யாரூரிற்கண்டடியேனயாத்தவாறே. (௪)

பிண்டத்திறபிறந்ததொருபொருளைமற்றைப பிண்டத்தைப்படை 499
த்ததனைப்பெரியவேதத, துண்டத்திற்பணிபொருளைசசுடுதீயாகிச சுழ
ல்காலாயநீராகிப்பாராயிறறைச, கண்டத்திறறீதுநஞ்சமுதுசெய்தக
ண்மூன்றுபடைத்ததொருகருமபைப்பாலை, யண்டத்துக்கப்புறத்தார்த
மக்குவித்தனைதயாரூரிற்கண்டடியேனயாத்தவாறே. (௫)

நீதியாய்நிலனாகிநெருப்பாயநீராய்நிறைகாலாயிவையிற்றினியமமாகிப் 500
பாதியாயொன்றாகியிரண்டாய மூன்றாய பரமாணுவாய்ப்பழுத்தடண்
களாகிச, சோதியாயிருளாகிச்சுவைகளாகிச்சுவைகலந்தவடபாலாயவீ
டாய்வீட்டி, நாதியாய்அந்தமாய்நின்றான்றனனையாரூரிற்கண்டடியேனய
ாத்தவாறே. (௬ எ-அ-௯-௧0)

திருச்சிற்றம்பலம்.

---

ஆகப்பதிகம் - ௨௬.

திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

பொய்ம்மாயப்பெருங்கடலிற் புலம்பாநின்ற புண்ணியங்காள்தீ 501
வினைகாள்திருவேநீங்கள், இம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க் கில்லை
யேயிடந்துதான்யானேல்வாரேனோர், தம்மானைத்தலைமகனைத்தண்ணலா
ரூர்த்தடங்கடலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யு, மெம்மானறனடித
தொடர்வானுழிதாகின்றே னிடையிலேன்கெடுவீர்காளிடறேன்மி
ன்னே. (௧)

502 ஐம்பெருமாபூதங்காளொருவிர்வேண்டிற் றொருவிர்வேண்டீரீண்
டிவ்வவனியெல்லா மும்பரமேயுமவசமேயாக்கவல்லீர்க் கில்லையேனு
ங்காபோகம்பானேல்வாரோ, ருமபருமாயூழியுமாயுலகேழாகி யொள
ளாரூர்நளமிர்தாம்வள்ளல்வாரோ, தம்பெருமானுய நின்றவரனைக
காண்பேன்றடைபபடுவேனுககருதிததருககேனமினனே. (௨)

503 சில்லுருவிற் குறியிருததிரிததலபற்றிசெழுஙகணுளேகுமிதுவூக
கடன்று, பல்லுருவிற்றொழில்பூணடபஞ்சபூதப் பளகீருமவசமன்றே
பாரேலெலலாஞ், சொல்லுருவிறசுடாமூன்றுயுருவமூனறுயதநாயனை
மூன்றுகியாண்டவாரூா, நலலுருவிறசிவனடியேயடைவேனுமமா | ன
மைப்புண்ணேன்கமைததுநீர்நடமின்களே. (௩)

504 ஊன்னுருவிற்சுவையொளியூறோசைநாற்றத துறுபபினதுகுறிபபா
குமைவீர் நுங்கண், மன்னுருவததியற்கைகளாலவைப்பீர்க்கையோ
வையகமேபோதாதேயானேலவாரோ, பொன்னுருவைததென்னூா
மன்னுகுன்றைப்புவிக்கெழிலாஞ் சிவக்கொழுந்தைபபுகுந்தென்சிந்தை
தன்னுருவைததந்தவனையெங்கைதன்னைத தலைப்படுவேன்றலைப்படுப்
பான்றருக்கேன்மின்னே. (௪)

505 துப்பினைமுன்பற்றறுவிறலேமிககசோர்வுபடுசூட்சியமேசுகமேநீங
க, ளொப்பினையைப்பாவிததிவ்வுலகமெல்லாமுழறுமிதுகுறைமுடிப்பீ
க்கரிதேயென்றன், வைப்பினைப்பொன்மதிலாரூர்மணியைவைகண் ம
ணாளனையெம்பெருமானைவானோர்தங்க, ளப்பனைசசெப்பிடவடைவே
னும்மானுமாட்டுணேனொட்டந்திங்கலையேன்மின்னே. (௫)

506 பொங்குமதமானமேயார்வச்செற்றக் குரோதமேயுலோபமே
பொறையேநீங்க, ளுங்கள்பெருமாநிலசதினெல்லையெல்லா முழறுமது
குறைமுடிபபீர்க்கரிதேயானே, லங்கமலத்தயனொடுமாலாகிமற்று மதற
கப்பாலொன்றுகிய றியவொண்ணுச, செங்கனகததணிக்குன்றைசசிவ
னையாரூர்சசெல்வனைசசோவேனும்மாற்செலுததுணேனே. (௬)

507 இடர்பாவமெனமிக்கதுக்கவேட்கை வெறுப்பேயென்றனைவீருழு
லகையோடிக், குடைகின்றீரக்குலங்கள் குலுங்கிநுங்கள்குறிநின்ற
மையாதே யானேல்வாரோ, ரடையார்தம்புரமூன்றுமெரிசெய்தானை
யமரர்கடம்பெருமானையரனையாரூ, ருடையானைக்கடுகச்சென்றடை
வேனும்மாலாட்டுணேனொட்டந்தீங்கலையேன்மின்னே. (௭)

508 விரைந்தாளுநல்குரவேசெல்வேபொல்லாவெகுட்சியேமகிழ்ச்சியே
வெறுப்பேநீங்க, ணிரைந்தோடிமாநிலத்தையரித்துத்தின்பீர்க்கெல்லை

யேநுகர்போகம்யானேல்வானோர், கரைநதோடவருநஞ்சையமுதுசெ
யதகற்பகததைதத தறபரததைததிருவாரூரிற், பரஞ்சோதிதனைக்காண
பேண்பேடனும்பண்பிற்பரிந்தோடியோட்டநதுபகட்டன்மின்னே. ()

ஏள்வாயதொழிற்பஞ்சேந்திரியவஞ்ச முகரிகாண்முழுதுமிவ்வுல 5509
கையோடி, நாளவாயுநமமுடையவமமராணைநடாததுகினறிாககனம
யாதேயானேல்வானோர், கீள்வானமுகடததனைததாஙகிநின்ற நெடுந்தூ
ணைப்பாதாளக்கருவைப்பாரூ, ராள்வானைககடுகசென்றடைவேனும்மா
லாட்டுணேனேட்டநதிஙகலையேனமினனே. (௯)

சுருக்கமொடுபெருககநிலைநீததல்பறறித துபபறையென்றனைவீரி 5510
வவுலகையோடிச, செருககிமிகைசெலுததியுமசெயகைவைகல் செய்கி
னறிர்ககமையாதேயானேன்மிக்க, தருககிமிகவரையெடுததவரக்கனுகந
தளரவடியெடுததவன்றன்பாடல்கேட, டிரககமெழுந்தருளியவெமபெ
ருமான்பாததிடையிலேனகெடுவீாகாளிடறேன்மினனே. (௧0)

திருசசிறறமபலம.

ஆகப்பதிகம • உஎ.

திருஆரூர் - திருததாணடகம.

திருசசிறறமபலம.

நீ றறினையுநெறறிமேலிட்டாாபோலு நீஙகாமேவெள்ளெலுமபுபூ 5511
ண்டாாபோலுங, காறறினையுஙகடிதாகநடாததாாபோலுங்கண்ணின்
மேற்கண்ணொன றுடையாாபோலுங, கூறறினையுஙகுளைகழலா லு
தைததாாபோலுங கொல்புலிததோலாடைககுழகாபோலும், ஆற்றி
னையுஞ்செஞ்சடைமேலவைததாாபோலு மணியாரூாததிருமூலததான
ளுரே. (௧)

பரியதோர்பாமபரைமேலார்த்தாாபோலும பாசுபதமபார்ததற்க 5512
ளித்தார்போலுங், கரியதோர்களிறறுரிவைபோாததார்போலுங காபா
லங்கட்டங்கக கொடியாாபோலும, பெரியதோாமலைவிலலா லெயதாா
போலும் பேர்நந்தியென்னும் பெயராாபோலும, அரியதோாரணங்க
ளட்டார்போலுமணியாரூாததிருமூலததானனுரே. (௨)

ஆணியுடையாாதோலுடையரெனபாாபோலுந தூயதிருமேனிச்செ 5513
லவர்போலும, பிணியுடையவடியாரைததீாபபாாபோலும்பேசுவார்க
கெல்லாமபெரியார்போலு, மணியுடையமாநாகமார்பபாாபோலும்வா
சுகிமாநாணககைவைததார்போலு, மணியுடையநெடுவீதிநடபயாாபோலு
மணியாரூர்த்திருமூலததானனுரே. (௩)

514 ஓட்டகததேயூறுகவுகநதாரபோலு மோருருவாயததோன்றியுயர்ந
தார்போலு, நாட்டகததேடைபலவுநவின்றாரபோலும் ஞானப்பெருங
கடற்கோர்நாதர்போலுங, காட்டகததிலாடலுடையாரபோலுங காமர
ஙகள்பாடிததிரிவாரபோலு, மாட்டகததிலானைநதுகந்தாரபோலு மணி
யாரூர்ததிருமூலததானனாரே. (ச)

515 ஏனததிளமருபபுபூண்டார்போலு மிமையவர்களேததவிருநதா
போலுங, கானககலலாற்கீணிழலாரபோலுங்கடனஞசமுண்டிருண்ட
கண்டாபோலும, வானததிளமதிசேர்சடையாரபோலும் வர்ண்கயிலை
வெறபினமகிழநதாரபோலு, மானததுமுனனெழுததாயினராபோலு
மணியாரூா ததிருமூலததானனாரே. (ரு)

516 காமனையுநகரியாககாயநதாரபோலுங கடன்ஞ்சமுணடிருண்டக
ண்டாபோலுஞ, சோமனையுஞ்செஞசடைமேல வைததாரபோலுஞ
சொல்லாகிசசொறபொருளாயினராபோலு, நாமனையுமவேததா
தாமேபோலு நஙகையோாபானமகிழநதநமபாபோலு, மாமனையுந்திரு
முடியாாதாமேபோலு மணியாரூாததிருமூலததானனாரே. (சா)

517 மூடியாாமதியரவமவைததாரபோலு மூவுலகுநதாமேயாயினரா
போலுஞ, செடியாாதலைகொணடுழலவாாபோலுஞ் செலகதிதான்கண
டசிவனாபோலுங, கடியாாநஞசுண்டிருண்டகண்டாபோலுங கஙகா
ளவேடககருததாபோலும, அடியாரடிமையுகபபாாபோலு மணியாரூா
ததிருமூலததானனாரே. (எ)

518 இந்திரததையினிதாகவீடதாாபோலு மிமையவாகள்வந்திறைஞசுமி
றைவாபோலுஞ், சுநதரததபொடிதன்னைததுதைநதாரபோலுந் தூயதி
ருமேனிததோனறலபோலு, மந்திரததைமனததுளளேவைத்தார்போலு
மாநாகநாணுகவார்ததாாபோலு, மந்தரததேயணியாாஞ்சுண்டார்போ
லு மணியாரூர்ததிருமூலததானனாரே. (அ)

519 பிண்டததைக்காககும்பிரானார்போலும் பிறவியிறவியிலாதார்போ
லு, முண்டத்துமுக்கண்ணுடையார்போலு முழுநீறுபூசுமுதல்வாபோ
லுங், கண்டத்திறையேகறுததார்போலுங் காளததிகாரோணமேயாா
போலு மண்டத்துக்கப்புறமாய்நின்றார்போலு மணியாரூர்த்திருமூலத
தானனாரே. (கூ)

ஒருகாலத்தொன்றாகினரார்போலு மூழிபலகண்டிருந்தார்போலு 520
ம், பெருகாமேவெள்ளந் தவிர்த்தார்போலும் பிறப்பிடும்மைசாக்கா
டொன்றில்லார்போலும், உருகாதாருள்ளத்துநில்லார்போலுமுகப்பா
மனத்தென்றுநீங்கார்போலும், அருகாகவந்தென்னையஞ்சலென்பாரணி
யாரூர்த்திருமூலத்தானனாரே. (௰)

நின்றுநடைபலவுநவின்றார்போலும் ஞானப்பெருங்கடற்கோர்நா 521
தாபோலுங், கொன்றுகிகொன்றதொன்றுண்டார்போலுங் கோளரக்
காகோனிலைகளகுறைத்தார்போலுஞ், சென்றாதிரிபுரங்களெய்தார்
போலுந் திசையனைத்துமாயனைத்துமானார்போலு, மன்றுகிலாயிரம
பேரார்போலு மணியாரூர்த்திருமூலத்தானனாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆசப்பதிகம் - உஅ.

திருஆரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

திருமணியைத்தித்திக்குந்தேனைப்பாலைத் தீங்கரும்பினின்சுவையை 522
த்தெளிந்ததேற, குருமணியைக்குழன்மொழிமைத்தாளமவீணை கொக்
கரையின்சச்சரியின பாணியானைப, பருமணியைப்பவளத்தைப பசும்
பொன்முத்தைப் பருப்பதத்திலருங்கலத்தைப்பாவாதீரக்கும, அருமணி
யையாரூரிலம்மானறன்னை யறியாதடிநாயேனயாத்தவாறே. (௧)

பொன்னேபோற்றிருமேனியுடையான்றன்னைப் பொங்குவெண் 523
ணூலானைப்புனிதனறன்னை, மின்னானைமின்னிடையாள்பாகன்றன்னை
வேழத்தினுரிவிரும்பிப் போர்த்தானறன்னைத், தன்னானைத்தன்னொப்பா
ரில்லாதானைத் தத்துவனையுத்தமனைத்தழலபோனமேனி, யனானையா
ரூரிலம்மான்றனையறியாதடிநாயேனயாத்தவாறே. (௨)

ஏற்றானையேழுலகுமானானறன்னை யேழ்கடலுமேழ்மலையுமானா 524
ன்றன்னைக், கூற்றானைக்கூற்றமுதைத்தானறன்னைக் கொடுமழுவாள்
கொண்டதோர்கையான்றன்னைக், காற்றானைத்தீயானைநீருமாகிக் கடி
கமழும்புன்சடைமேறகங்கைவெள்ள, ஆற்றானையாரூரிலம்மான்றன்
னையறியாதடிநாயேனயாத்தவாறே. (௩)

முந்தியவல்வினைகடீாப்பான்றன்னை மூவாதமேனிமுக்கண்ணினா 525
னைச், சந்திரனும்வெங்கதிருமாயினானைச் சங்கரனைச்சங்கக்குழையான
றன்னை, மந்திரமுமறைப்பொருளுமானான்றன்னை மறுமையுமிம்மையு
மானான்றன்னை, யந்தரனையாரூரிலம்மான்றன்னையறியாதடிநாயேனயா
ர்த்தவாறே. (௪)

26 பிறநெறியாய்ப்பீடாகிப்பிஞ்ஞகனுமாய்ப் பித்தனாய்ப்பத்தர்மனத்தி னுள்ளே, யுறநெறியாய்யோமமாய்ஈமக்காட்டிலோரிபலவிடநட்டமாடி னானைத், துறநெறியாய்த்தூபமாய்த்தோற்றமாகிநாற்றமாய் நன்மலர் மேலுறைகின்ற, அறநெறியையாரூரிலம்மான்றன்னையறியாதடிநா யேனயர்த்தவாறே. (௬)

27 பழகியவல்வினைகள்பாறுவானைப் பசுபதியைப்பாவகனைப்பாவந் தீர்க்குங், குழகனைக்கோளரவொன்றாட்டுவானைக் கொடுகொட்டி கொண்டதோர்கையானைத்தன்னை, விழவனைவீரட்டமேவினானைவிண் ணவர்களேத்திவிரும்புவானை, யழகனையாரூரிலம்மானைத்தன்னையறியா தடிநாயேனயர்த்தவாறே. (௭)

28 சூளாமணிசேர்முடியான்றன்னைச் சுண்ணவெண்ணீறணிந்தசோ தியானைக், கோளவாயரவமசைத்தானைத்தன்னைக் கோலப்புலித்தோலா டைக்குழகன்றன்னை, நாள்வாயும்பத்தர்மனத்துளானைப் பம்பணங்கனை முகக்கண்ணனை, ஆளவானையாரூரிலம்மான்றன்னையறியாதடிநாயேனயர் த்தவாறே. (௭)

29 முத்தினைமணிதன்னைமாணிக்கத்தை மூவாதகற்பகத்தின்கொழுந் துதன்னைக், கொத்தினைவயிரத்தைக்கொலவேறூர்ந்து கோளரவொன் றாட்டுங்குழகன்றன்னைப், பத்தனைப்பத்தர்மனத்துளானைப் பருதிபோற் றிருமேனியுடையான்றன்னை, யத்தனையாரூரிலம்மான்றன்னையறி யாதடிநாயேனயர்த்தவாறே. (௮)

30 பையாடரவங்கையேந்தினைப் பருதிபோற்றிருமேனிப்பானீ ற்றானைநெய்யாடுதிருமேனிநிமலன்றன்னை நெற்றிமேனமற்றொருக ண்ணிறைவித்தானைச், செய்யானைச்செழும்பவளத் திரளொப்பானைச் செஞ்சடைமேல்வெண்டிங்கள்சோதிதானை, யையாறுமேயானையா ரூரானையறியாதடிநாயேனயர்த்தவாறே. (௯)

31 சீரார்முடிபத்துடையான்றன்னைத்தேசழியத்திருவிரலாற்சிதையநூ க்கிப், பேரார்பெருமைகொடுமைகொடுத்தான்றன்னைப் பெண்ணிர ண்டுமாணுமாய்நின்றான்றன்னைப், போரார்புரங்கள்புரளநூறும்புண் ணியனைவெண்ணீறணிந்தான்றன்னை, யாரானையாரூரிலம்மான்றன் னையறியாதடிநாயேனயர்த்தவாறே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

ஆசப்பதிகம் - உக.

௩௪. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

எம்பந்தவல்வினைநோய்தீர்த்திட்டான்கா ணேழ்கடலுமேழுலகு 5532
மாயினான்காண், வம்புநறுங்கொன்றையந்தார்மாலையான்காண் வளாம
திசேர்கண்ணியன்காண்வானோர்வேண்ட, அம்பொன்னுருவமூவெயிலு
மெரிசெய்தான்காணனலாடியானஞ்சுமாடினான்காண், செம்பொன்
செய்மணிமாடத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௧)

அக்குலாமரையினன்காண்டியார்க்கென்று மாரமுதாயணிகொ 5533
ளமையாறருன்காண், கொக்குலாம்பீலியொடுகொன்றைமாலை குளிர்ம
தியுங்கூரரவுநீருஞ்சென்னித், தொக்குலாஞ்சடையினன்காண்டொண்
டர்சொல்லுந் தூநெறிகாண்வானவர்கடுதிசெய்தேத்துந், திக்கெலாநி
றைந்தபுகழ்த்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௨)

நீரேறுசடைமுடியெண்மலன்றான்கா ணெற்றிமேலொற்றைக்க 5534
ண்ணிறைவித்தான்காண், வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண் வ
ளர்மதிசேர்சடையான்காண்மாதேவன்காண், காரேறுமுகிலனையகண்
டத்தான்காண் கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண், சீரேறுமணி
மாடத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௩)

கானேறுகளிற்றுரிவைப்போர்வையான்காண் கற்பகங்காண்கால 5535
னையன்றுதைசெய்தான்காண், ஊனேறுமுடைதலையிற் பலிகொள்வா
ன்காணுத்தமன்காணொற்றியூர்மேவினான்கா, ணானேறொன்றதுவேறு
மண்ணன்றான்கா ணாதித்தன்பல்லிறுத்தவாதிதான்காண், தேனேறுமலர்
ச்சோலைத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௪)

பிறப்போடிறப்பென்றுமில்லாதான்காண் பெண்ணுருவோடா 5536
ணுருவமாயினான்காண், மறப்படுமென்சிந்தைமருணீக்கினான்காண்
வானவருமறியாதநெறிதந்தான்கா, ணறப்படுபூமலர்தூபந்தீபநல்லநறு
ஞ்சாந்தங்கொண்டேத்திநாளுமவானோர், சிறப்போடுபூசிக்குந்திருவா
ரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௫)

சங்கரன்காண்சக்கரமாற்கருள்செய்தான்காண் தருணேந்துசேகர 5537
ன்காண்டலைவன்றான்கா, ணங்கமலத்தயன்சிரங்களொன்றையறு
த்தவன்காணணிபொழில்சூழையாற்றான்கா, ணெங்கள்பெருமான்கா
ணென்னிடர்கள்போகவருள்செய்யு மிறைவன்காணிமையோரேத்து
ஞ், செங்கமலவயல்புடைசூழ்திருவாரூரிற் றிருமூலட்டானத்தெஞ்செ
ல்வன்றானே. (௬)

நன்றருளித்தீதகற்றுநம்பிரான்கா ணான்மறையோடாறங்கமாயினா ன்காண், மின்றிகழுஞ்சோதியன்கா ணோதிதான்காண் வெள்ளேறுநின்று லவுகொடியினான்காண், ஒன்றுபொழிற்கச்சியேகம்பன்றான்காண் சோ றறுத்துறையான்காண் சோலைசூழ்ந்த, தென்றலார்மணங்கமழுந்திரு வாரூரிற் றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (எ)

பொன்னலத்தநறுங்கொன்றைச்சடையினான்காண் புகலூரும்பூவ ணமும்பொருந்தினான்காண், மின்னலத்தநுண்ணிடையாள்பாகத்தான் காண் வேதியன்காண்வெண்புரிநூன்மார்பினான்காண், கொன்னலத்த மூவிலைவேலேந்தினான்காண் கோலமாநீறணிந்தமேனியான்காண், செ ந்நலத்தவயல்புடைசூழ்திருவாரூரிற் றிருமூலத்தானத்தெஞ் செல்வன் றானே. (அ)

விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண் வேலைவிடமுண்டி ருண்டகண்டத்தான்காண், மண்டலத்திலொளிவளரவிளங்கினான்காண் வாய்மூருமறைக்காடுமருவினான்காண், புண்டரிகக்கண்ணானும்பூவின் மேலைப் புத்தேளுங்காணபரியபுராணன்றான்காண், டெண்டிரைநீர் வயல்புடைசூழ்திருவாரூரிற் றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. ()

செருவளருஞ்செங்கண்மாலேற்றினான்காண் டென்னானைக்காவா ன்காண்மயில்வீழ, மருவலர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண் வஞ்சக ர்பாலணுகாதமைந்தன்றான்காண், ணருவரையையெடுத்தவன்றன்சிரங் கள்பத்து மைந்நான்குதோளுநெரிந்தலறவன்று, திருவிரலாலடர்த்தவ ன்காண் திருவாரூரிற் றிருமூலத்தானத்தெஞ்செல்வன்றானே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் • ௧௰.

---

திருஆரூர். திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

இடர்கெடுமாறெண்ணுதியேனெஞ்சேநீவா வீண்டொளிசேர்கங் கைச்சடையாயென்றுஞ், சுடரொளியாயுள்விளங்கு சோதியென்றுந் தூநீறுசேர்திலங்குதோளாயென்றுங், கடல்விடமதுண்டிருண்டகண் டாவென்றுங் கலைமான்மறியேந்துகையாவென்றும், அடல்விடையா யாரமுதேயாதியென்றுமாரூராவென்றென்றேயலறாநில்லே. (க)

செடியேறுதீவினைகடீரும்வண்ணஞ் சிந்தித்தேநெஞ்சமேதிண்ண மாகப், பொடியேறுதிருமேனியுடையாயென்றும் புரந்தரன்றன்றோளு ணித்தபுனிதாவென்று, மடியேனையாளாகக்கொண்டாயென்று மம்மா

னேயாரூரெம்மரசேயென்றுங், கடிநாறுபொழிற்கச்சிக்கம்பாவென்று
ங் கற்பகமேயென்றென்றேசதருகிலலே. (௨)

நிலைபெறுமாறெண்ணுதியே னெஞ்சேநீவா நித்தலுமெம்பிரானு
டையகோயிலபுக்குப, புலாவதன்முன்னலகிடடுமெழுக்குமிட்டுப பூமா
லைபுனைந்தேத்திப்புகழ்ந்துபாடித, தலையாரக்குமபிட்டுக கூத்துமாடிச்
சங்கராசயபோற்றிபோற்றியென்றும, அலைபுனலசோசெஞ்சடையெ
ம்மாதியென்று மாரூராவெனறெனறேயலறுகிலலே (௩)

புண்ணியமுநனனெறியு மாவதெல்லா நெஞ்சமேயிதுகணடாய்
பொருந்தக்கேணீ, நுண்ணியவெண்ணூல்கிடந்தமாாபாவென்று நந்
தாதவொண்சுடரேயென்றுநாளும், விண்ணியங்குதேவாகளும வேத
நானகும விரைமலாமேனுன்முகனுமாலுங்கூடி, யெண்ணரியதிருநாம
முடையாயெனறு மெழிலாரூராவெனறேயேததாகிலலே. (௪)

இழைத்தநாளெலலைகடபபதெனறு விரவிறேநண்பகலுமேதநி
வாழததிப, பிழைததெலாம்பொறுததருளசெய் பெரியோயெனறும்பி
ஞுகனேமைஞுவிலுஙகண்டாவெனறும, அழைததலறியடியே வன்
னரணஙகண்டா யணியாரூரிடஙகொண்டவழகாவெனறுங, குழற்ச
டையெஙகோனெனறுங்கூறுநெஞ்சே குறறமிலலெனமேனுன்கூறி
னேனே. (௫)

நீ பபரியபலபிறவிநீக்குமவண்ண நினைத்திருந்தேன்காணெஞ்சேசி
த்தமாகச, சேபபிரியாவெல்கொடியினனேயெனறுஞ சிவலோகநெறி
தந்தசிவனேயெனறும், பூபபிரியாநானமுகனும்புள்ளினமேலைப் புண்ட
ரிககண்ணனும்போற்றியென்னத, தீபபிழம்பாயநின்றவனேசெல்வம
ல்கு திருவாரூராவென்றேசிந்திநெஞ்சே. (௬)

பற்றிநின்றபாவங்கள்பாறறவேண்டிற் பரகதிக்குச்செல்வதொருப
ரிசுவேண்டிற், சுற்றிநின்றசூழ்வினைகள்வீழ்ககவேண்டிற் சொலலுகே
னகேணெஞ்சேதுஞசாவண்ணம், உற்றவருமுறுதுணையுநீயேயென்று
முன்னையலாலொருதெய்வமுள்கேனென்றும், புற்றரவக்கச்சார்ததபுனி
தாவென்றும் பொழிலாரூராவென்றேபோற்றுகில்லே. (௭)

மதிதருவாய்நெஞ்சமேயுஞ்சுபோக வழியாவதிதுகண்டாய்வானோ
ரக்கெல்லாம், அதிபதியேயாரமுதேயாதியென்று மம்மானேயாரூரெம்
மையாவென்றுந், துதிசெய்துதுன்றுமலர்கொண்டுதூவிச சூழுமவலஞ்
செய்துதொண்டுபாடிக், கதிர்மதிசேர்சென்னியனேகாலகாலா கற்பக
மேயென்றென்றேகதறுகில்லே. (௮)

50 பாசத்தைப்பற்றறுக்கலாகுநெஞ்சே பரஞ்சோதிபண்டரங்காபாவ நாசா, தேசத்தொளிவிளக்கேதேவதேவே திருவாரூர்த்திருமூலத்தானா வென்று, நேசத்தைநீபெருக்கிநேர்நின்றுள்கி நித்தலுஞ்சென்றடிமேலவீழ்ந்துநின்று, ஏசற்றுநின்றிமையோரேறேயென்றுமெம்பெருமானென் றென்றேயேத்தாநில்லே. (௯)

51 புலன்களைநதாலாட்டுண்டுபோதபோகிப் புறம்புறமேதிரியாதே போதுநெஞ்சே, சலங்கொள்சடைமுடியுடைய தலைவாவென்றுந் தக்கனசெய்பெருவேள்விதகர்த்தாயென்றும் இலங்கையர்கோன்சிரநெரித்தவிறைவாவென்று மெழிலாரூரிடங்கொண்ட எந்தாயென்று, நலங்கொளடியென்றலைமேலவைத்தாயென்று நாடோறு நவின்றேத்தாய் நன்மையாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

---

ஆகப்பதிகம் • ௬௧

திருஆரூர்-போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

52 கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றி கழலடைந்தார்செல்லுங்கதியேபோற்றி, அற்றவர்கட்காரமுதமானாய்போற்றி யல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி, மற்றொருவரொப்பில்லா மைந்தாபோற்றி வானவர்கள்போற்று மருந்தேபோற்றி, செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி திருமூலத்தானனே போற்றி போற்றி. (௧)

53 வங்கமலிகடனஞ்ச முண்டாய்போற்றி மதயானையீருரிவைபோர்த்தாய்போற்றி, கொங்கலருநறுங்கொன்றைத்தாராய்போற்றி கொல்புலித்தோலாடைக்குழகாபோற்றி, அங்கணனேயமரர்கட மிறைவாபோற்றி யாலமர்நீழலறஞ்சொன்னாய்போற்றி, செங்கனகத்தனிக்குன்றே சிவனேபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௨)

54 மலையான்மடந்தைமணாளாபோற்றி. மழவிடையாய் நின்பாதம் போற்றிபோற்றி, நிலையாகவென்னெஞ்சினின்றாய்போற்றி நெற்றிமேலொற்றைக் கண்ணுடையாய்போற்றி, இலையார்ந்தமூவிலைவேலேந்திபோற்றி யேழ்கடலுமேழ்பொழிலுமானாய்போற்றி, சிலையாலன் றெயிலெரித்தசிவனேபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௩)

55 பொன்னியலுமேனியனே போற்றிபோற்றி பூதப்படையுடையாய் போற்றிபோற்றி, மன்னியசீர்மறைநான்குமானாய்போற்றி

றியேறுகையானே போற்றிபோற்றி, யுன்னுமவர்க்குண்மையனே
போற்றிபோற்றி யுலகுக்கொருவனேபோற்றிபோற்றி, சென்னி
மிசைவெண்பிறையாயபோற்றிபோற்றி திருமூலத்தானனே போற்
றிபோற்றி. (௪)

நஞ்சுடையகண்டனேபோற்றிபோற்றிநற்றவனேநின்பாதம்போ 655
ற்றிபோற்றி, வெஞ்சுடரோன்பல்லிறுத்தவேந்தேபோற்றி வெண்ம
தியங்கண்ணிவிகிர்தாபோற்றி, துஞ்சிருளிலாடலுகந்தாயபோற்றி தூ
நீறுமெய்க்கணிந்தசோதிபோற்றி, செஞ்சடையாயநின்பாதம் போற்றி
போற்றிதிருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௫)

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றி சதாசிவனேநின்பாதம்போற் 655
றிபோற்றி, பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றிபுண்ணியனே
நின்பாதம்போற்றிபோற்றி, அங்கமலத்தயனோடுமாலுங்காணாவனலு
ருவாநின்பாதம்போற்றிபோற்றி, செங்கமலத்திருப்பாதம்போற்றி
போற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௬)

வம்புலவுகொன்றைச்சடையாயபோற்றி வான்பிறையும்வாளரவு 655
மவைத்தாயபோற்றி, கொம்பனையநுண்ணிடையாள் கூறாபோற்றி
குரைகழலாற்கூற்றுதைத்தகோவேபோற்றி, நம்புமவர்க்கரும்பொரு
ளேபோற்றிபோற்றி நால்வேதமாறங்கமானாயபோற்றி, செம்பொ
னேமரகதமேமணியேபோற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி.

உள்ளமாயுள்ளத்தேநின்றாயபோற்றி யுகப்பார்மனத்தென்றுநீங்கா 655
யபோற்றி, வள்ளலேபோற்றிமணாளாபோற்றி வானவர்கோன்றோ
ணிதத்தமைந்தாபோற்றி, வெள்ளையேறேறும்விகிர்தாபோற்றிமே
லோர்க்குமேலோர்க்குமேலாயபோற்றி, தெள்ளுநீர்க்கங்கைச்சடை
யாய்போற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௮)

பூவார்ந்தசென்னிப்புனிதாபோற்றி புத்தேளிர்போற்றும்பொரு 656
ளேபோற்றி, தேவார்ந்ததேவர்க்குந்தேவேபோற்றி திருமாலுக்காழி
யளித்தாய்போற்றி, சாவாமேகாத்தென்னையாண்டாயபோற்றி சங்
கொத்தநீற்றெஞ்சதுராபோற்றி சேவார்ந்தவெல்கொடியாயபோற்றி
போற்றி திருமூலத்தானனேபோற்றிபோற்றி. (௯)

பிரமன்றன்சிரமரிந்தபெரியோய்போற்றிபெண்ணுருவோடாணு 656
ருவாய்நின்றாய்போற்றி, கரநான்குமுக்கண்ணுமுடையாயபோற்றிகா
தலிப்பார்க்காற்றவெளியாயபோற்றி, அருமந்ததேவர்க்கரசேபோற்

றியன்றரக்கனைநானகுதோளுநதாளுஞ், சிரநெரிததசேவடியாயபோ
ற்றிபோற்றி திருமூலததானனேபோறறிபோறறி. (௧௦)

திருசசிறறமபலம.

ஆகப்பதிகம் - ௧௨.

திருஆரூர் - அரநெறிததிருததாணடகம.

திருசசிறறமபலம.

பொருங்கைமதகரியுரிவைபபோர்வையானைப பூவணமுமவலஞ
சுழியும்பொருநதினனைக, கருமபுதருகட்டியையின்னமிர்தைததேனைக
காண்பரியசெழுஞசுடரைககனககுனறை, யிருங்கனகமதிலாரூரமூ
லததானததெழுநதருளியிருநதானையிமையோரேததும, அருநதவனைய
ரநெறியிலபபன்றனனையடைநதடியேனருவினைநோயறுததவாறே.(௧)

கற்பகமுமிருசுடருமாயினனைக் காளததிகயிலாயமலையுளானை, விற
பயிலுமதனழிய விழிததானறனனை விசயனுககுவேடுவனாய் நின்றான
றன்னைப், பொற்பமருமபொழிலாரூரமூலததானம பொருநதியவெம
பெருமானைப்பொருநதார்சிந்தை, யற்புதனையரநெறியிலபபனறன்னை
யடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (௨)

பாதியொருபெண்முடிமேறகங்கையானைப் பாசூர்பரங்குன்றமே
யான்றன்னை, வேதியனைததனனடியாரககெளியானறன்னைமெயஞஞா
னவிளக்கானைவிரையேநாறும், போதியலும்பொழிலாரூர் மூலததான
ம் புற்றிடங்கொண்டிருநதானைப போறறுவார்க, ளாதியனையரநெறி
யி லப்பன்றன்னையடைநதடியேனருவினைநோயறுததவாறே. (௩)

நந்திபணிகொண்டருளுநம்பனறனனை நாகேசசரமிடமாநண்ணி
னானைச், சந்திமலரிட்டணிநதுவானோரேததுந்ததுவனைச்சககரமாற்கீ
ந்தான்றன்னை, யிந்துநுழைபொழிலாரூர்மூலததான மிடங்கொண்ட
பெருமானையிமையோர்போறறும், அநதணனையரநெறியிலயபன்ற
ன்னை யடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (௪)

சுடர்ப்பவளததிருமேனிவெண்ணீற்றானைச் சோதிலிங்கத்தூங்கா
னைமாடத்தானை, விடக்கிடுகாடிடமாகவுடையான்றன்னை மிக்கரண
மெரியூட்டவல்லான்றன்னை, மடற்குலவுபொழிலாரூர்மூலத்தானமன்
னியவெம்பெருமானைமதியார்வேள்வி, யடர்ததவனையரநெறியிலப்ப
ன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (௫)

தாயவனையெவ்வுயிர்க்குந்தன்னொப்பில்லாத் தகுதில்லைநடம்பயிலு
ந்தலைவன்றன்னை, மாயவனுமலரவனும்வானோரேததமறிகடனஞ்சுண்
டுகந்தமைந்தன்றன்னை, மேயவனைப்பொழிலாரூர் மூலத்தானம்விரும்

பியஎம்பெருமானையெல்லாமுன்னே, யாயவனையரநெறியிலப்பன்றன்
னை யடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (சு)

**பொ**ருளியல்நற்சொறபதங்களாயினானைபபுகலூரும்புறம்பயமுமே
யான்றனனை, மருளியலுஞ்சிந்தையர்க்கு மருந்துதனனை மறைக்காடுஞ்
சாயககாடுமன்னினானை, யிருளியலநறபொழிலாரூர்மூலததானததினித
மரும்பெருமானையிமையோரேதத, வருளியனையரநெறியிலபபன்றன்
னையடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (எ)

**கா**லனைககாலாறகாயந்தகடவுடனனைக்காரோணங்கழிப்பாலைமே
யான்றன்னைப, பாலனுககுப்பாற்கடலன் றீந்தான்றன்னைப்பணியுக
ந்தவடியாாகட்கினியான்றனனைச், சேலுகளும்வயலாரூர்மூலததானஞ்
சேர்ந்திருந்தபெருமானைபபவளமின்ற, ஆலவனையரநெறியிலபபன்ற
ன்னையடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (அ)

ஒப்பொருவரில்லாதவொருவன்றன்னை யோததூருமுறையூருமே
வினானை, வைப்பவனைமாணிககசசோதியானைமாருதமுந்தீவெளிநீர்ம
ண்ணுனானைப், பெ (கூ)

**ப**கலவன்றனபலலுகுததபடிறன்றன்னைப் பராயத்துறைப்பைஞ்ஞீ
லியிடமபாவிததானை, யிகலவனையிராவணனையிடாசெயதானை யேத
தாதார்மனத்தகததுளிருளானானைப், புகழ்நிலவுபொழிலாரூர்மூலத்தா
னம் பொருந்தியஎம்பெருமானைப் போறறுாசிந்தை, யகலவனையரநெ
றியி லப்பனறன்னையடைந்தடியேனருவினைநோயறுததவாறே. (க0)

திருசசிறறமபலம.

ஆசப்பதிகம் - கக,

திருஆரூர் - திருததாணடகம.

திருசசிறறமபலம்.

ஒருவனையுலகேததநின்றநாளோவோருருவேமூவுருவமானநாளோ
கருவனைக்காலனைமுனகாயந்தநாளோகாமனையுங்கண்ணழலால்விழி
ததநாளோ, மருவனைமண்ணுமவிண்ணுந தெரிததநாளோ மான்மறி
க்கையேந்தியோர்மாதோர்பாகந, திருவினாள்சேர்வதறகு முன்னோபின்
னோதிருவாரூர்கோயிலாககொண்டநாளே. (க)

**ம**லையார்பொற்பாவையொடு மகிழ்ந்தநாளோவானவரைவலியமு
தமூட்டியந்நா, ணிலைபேறுபெறுவிததுநின்றநாளோவினைப்பரியதழற்பி
ழம்பாய்நிமிர்ந்தநாளோ, அலைசாமேயலைகடனஞ்சுண்டநாளோவமரர்க
ணம்புடைசூழ விருந்தநாளோசிலையான்முப்புரமெரித்தமுன்னோபின்
னோதிருவாரூர்கோயிலாக்கொண்டநாளே, (உ)

74 பாடகஞ்சோமெல்லடிநற்பாவையாளுநீயும்போய்ப பார்த்தனதுப லத்தைககாணபான், வேடனாயவில்வாங்கி யெய்தநாளோ விண்ணவ ர்க்குங்கண்ணவனாயினறநாளோ, மாடமொடுமாளிகைகணமல்குதில் லை மணிதிகழுமமபலததே மனனிககூததை, யாடுவானபுகுவதறகு மு னனோபினனோவணியாரூாகோயிலாககொணடநாளே. (௩)

75 ஓங்கியுயர்ந்தெழுநதுநின்றநாளோ வோருகமபோலேழுசமாயினன றநாளோ, தாங்கியசீரததலையான வானோாசெயததககனறன்பெருவே ள்விதகர்ததநாளோ, நீங்கியநீரததாமரையானெடுமாலோடுநில்லாயெம பெருமானேயெனறஙசேததி, வாங்கிமதிவைபபதறகுமுனனோபின்னோ வளராரூர்கோயிலாககொணடநாளே. (௪)

76 பாலனாயவளர்நதிலாபபானமையானே பணிவாாகட்கங்கங்கேபற் றானோ, நீலமாமணிகணடததெணடோளானே நெருநலாயின்றாகி நாளையாகுஞ், சீலமேசிவலோகநெறியேயாகுஞ்சீாமையேகூாமையே குண்மேநல்ல, கோலநீகொள்வதறகுமுனனோபினனோகுளிராரூர்கோ யிலாககொண்டநாளே. (௫)

77 திறம்பலவும்வழிகாட்டிசசெயகைகாட்டிச்சிறியையாயபெரியை யாய்நின்றநாளோ, மறமபலவுமுடையாரைமயககநீர்தது மாமுனிவா ககருள்செய்தங்கிருநதநாளோ, பிறங்கியசீாபபிரமன்றனறலைகையேந் திபபிசசை யேற்றுண்டுழன்றுநினறநாளோ, அறம்பலவுமுரைபபதற்கு முன்னோபின்னோவணியாரூர்கோயிலாகசொணடநாளே. (௬)

78 நிலந்தரத்து நீண்டுருவமானநாளோ நிரபனவுநடபபனவுநீயேயாகி க், கலந்துரைக்கக்கற்பகமாய நினறநாளோ காரணததானுரணனைகக றபிததன்று, வலஞ்சுருககி வல்லசுரர் மாணடுவீழ வாசுகியைவாய்மடு த்துவானோருய்யச, சலநதரனைக் கொலவதற்குமுன்னோபின்னோ தண் ணாரூர் கோயிலாககொண்டநாளே. (எ)

79 பாதத்தால்முயலகனைப்பாதுகாததுப் பாரகததேபரஞ்சுடராய்நின் றநாளோ, கீதததைமிகப்பாடு மடியார்ககென்றுங் கேடிலாவானுலகங் கொடுததநாளோ, பூததான்டொருநீலிபுனிதன்மேவிய பொய்யுரை யாமறைநாலவர்விண்ணோர்க்கென்றும், வேதததைவிரிப்பதற்குமுன னோபின்னோவிழவாரூாகோயிலாக்கொண்டநாளே. (அ)

80 புகையெட்டும்போக்கெட்டும்புலன்களெட்டும் பூதலங்களவையெ ட்டும்பொழில்களெட்டுங், கலையெட்டுங்காப்பெட்டுங்காட்சியெட்டுங்

கண்ணுளார்போலேகரந்துநிற்பர், வெள்ளச்சடைமுடியர்வேதநாவர் வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௬)

67 தொட்டிலங்குசூலத்தர்மழுவாளேந்திச் சுடர்க்கொன்றைத்தாரணிந்துசுவைகள்பேசிப், பட்டிவெள்ளேறேறிப்பலியுங்கொள்ளார் பார்ப்பாரைப்பரிசழிப்பாரொருகாலின்றாராற, கட்டிலங்குவெண்ணீற்றர்கனலப்பேசிக்கருத்தழித்துவளேகவர்ந்தார்காலைமாலை, விட்டிலங்குசடைமுடியர்வேதநாவர் வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௬)

68 பெண்பாலொருபாகம்பேணவாழ்க்கைக் கோணாகம்பூண்பனவுநாணுஞ்சொல்லார், உண்பாருறங்குவாரொவ்வாநங்கா யுண்பதுநஞ்சன்றேலோவியுண்ணார், பண்பாலவிர்சடையர்பற்றிநோக்கிப் பாலைப்பரிசழியப்பேசுகின்றார், விண்பான்மதிசூடிவேதமோதிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (எ)

69 மருதங்களாயமொழிவார்நங்கையோடு வானவருமாலயனுங்கூடித்தங்கள், சுருதங்களாறறுத்துத்தூநீராட்டித் தோத்திரங்கள்பலசொல்லித்தூபங்காட்டிக், கருதுங்கொலெம்பெருமான்செயகுற்றேவலென்பாராகுவேண்டும்வரங்கொடுத்து, விகிர்தங்களாநடப்பர்வெள்ளேறேறிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (அ)

70 புள்ளானுநான்முகனும்புகழும்போந்துங்காணா பொரியழலாய்நின்றான்றன்னை, யுள்ளானையொன்றல்லாவுருவினானையுலகுக்கொருவிளக்காய் நின்றான்றன்னைக், கள்ளேந்துகொன்றைதூய்க்காலைமூன்றுமோவாமேநின்றுதவங்கள்செய்த, வெள்ளானை வேண்டும்வரங்கொடுப்பார வெண்காடு மேவியவிகிர்தனாரே. (௯)

71 மாகுன்றெடுத்தான்றன்மைந்தனுமாவேழம்வில்லா மதித்தான்றன்னை. நோக்குந்துணைத்தேவ ரெல்லாநிற்க நொடிவரையின்றேவ விழித்தான்றன்னைக், காக்குங்கடலிலங்கைக்கோமானறன்னைக்கதிர்முடியுங்கண்ணும்பிதுங்கவூன்றி, வீகரந்தவிர்த்தவிரலார்போலும் வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

ஆசப்பதிகம் - ௩௬.

திருப்பழனம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

72 அலையார்கடனஞ்சமுண்டார்தாமே யமரர்களுக்கருள்செய்யுமாதிதாமே, கொலையாயகூற்றமுதைத்தார்தாமே கொல்வேங்கைத்தோலொன்றுடைத்தார்தாமே, சிலையாற்புரமூன்றெரித்தார்தாமே தீநோய்களை

ங்தென்னையாண்டார்தாமே, பலிதேர்ந்தழகாயபண்பர்தாமே பழனநக
ரெமபிரானார்தாமே. (க)

வெள்ளமொருசடைமே லேற்றூர்தாமே மேலார்கண்மேலாரா
ண்மேலார்தாமே,கள்ளங்கடிந்தென்னையாண்டார்தாமே கருதத்திடைய
பூதப்படையார்தாமே, யுள்ளதுவசைதருவாராதாமே யுறுநோய்சிறுபி
ணிகடீர்ப்பார்தாமே, பள்ளபரவைநஞ்சுண்டார்தாமே பழனநகரெம
பிரானாதாமே. (உ)

இரவும்பகலுமாய்நின்றூர்தாமே யெப்போதுமென்னெஞ்சத்துள்ளார்
தாமே, யரவமரையிலசைத்தார்தாமே யனலாடியங்கைமறித்தார்தாமே
குரவங்கமழுங்குற்றுலாதாமே கோலங்கணமேன்மேலுகப்பார்தாமே
பரவுமடியார்க்குபபாங்கர்தாமே பழனநகரொம்பிரானாதாமே. (ங)

மாறின்மதின்மூன்றுமெய்தாராதாமே வரியரவங்கச்சாகவார்த்தாராதா
மே, நீறுசேர்திருமேனிநிமலாதாமே நெற்றிநெருப்புக்கண்வைத்தார்
தாமே, யேறுகொடுஞ்சூலக்கையாராதாமே யென்பாபரணமணிந்தார்
தாமே, பாறுண்டலையிற்பலியார்தாமே பழனநகரொமபிரானாதாமே.

சீரால்வணங்கடபடுவார்தாமே திசைகெல்லாந்தேவாகின்றூர்
தாமே, யாராவமுதமுமானார்தாமே யளவிலபெருமையுடையார்தாமே
நீரார்நியமமுடையாாதாமே நீளவரைவில்லாகவளைத்தாராதாமே
பாரார்பரவபபடுவார்தாமே பழனநகரொம்பிரானாதாமே. (ரு)

காலனுயிர்வெளவவல்லார்தாமே கடிதோடும்வெள்ளைவிடையார்
தாமே, கோலம்பலவுமுகப்பார்தாமே கோணாகணாகப்பூண்டார்தா
மே, நீலமபொலிந்தமிடற்றூர்தாமே நீள்வரையினுச்சியிருப்பார்தாமே
பாலவிருத்தருமானார்தாமே பழனநகரொம்பிரானார்தாமே. (சா)

ஏய்ந்தவுமைநங்கைபங்கர்தாமே யேழுழிக்கப்புறமாய் நின்றூர்தாமே
யாய்ந்துமலர்தூவ நின்றூர்தாமே யளவில்பெருமை யுடையார்தாமே
தேய்ந்தபிறைசடைமேல் வைத்தார்தாமே தீவாயரவதனையார்த்தார்தா
மே, பாய்ந்தபடர்கங்கையேற்றூர்தாமே பழனநகரொம்பிரானாதாமே

ஓராதாருள்ளத்தினில்லார்தாமே யுள்ளூறுமன்பர்மனத்தார்தாமே
பேராதென்சிந்தையிருந்தார்தாமே பிறர்க்கென்றுங்காட்சிக்கரியார்தா
மே, யூராகுமூவுலகத்துள்ளார்தாமே யுலகைநடுங்காமற்காப்பார்தாமே
பாரார்முழவத்திடையார்தாமே பழனநகரொம்பிரானார்தாமே. (அ)

நீண்டவர்க்கோர்நெருப்புருவமானார்தாமே நேரிழையையொரு பாகம்வைத்தார்தாமே, பூண்டரவைபபுலிததோன்மேலார்த்தார்தாமே பொன்னிறத்தவெள்ளசசடையார்தாமே, யாண்டுலகேழனைத்தினையும வைத்தார்தாமே யங்கஙகேசிவமாகின்றார்தாமே, பாண்டவரிற்பார்த்தனுக்குப்பரிந்தார்தாமே பழனநகரெம்பிரானார்தாமே. (கூ)

விடையேறிவெண்டுலகத் திருப்பார்தாமே விரிகதிரோன் சோற்றுத்துறையார்தாமே, புடைசூழதேவர் குழாத்தாரதாமே பூநதுருத்தி நெய்த்தானமேயார்தாமே, யடைவேபுனல்சூழையாற்றார்தாமேயரகக னையுமாற்ற லழிததார்தாமே, படையாபபல்பூத முடையார்தாமே பழனநகரெம்பிரானார்தாமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் ௩௯.

---

திருவையாறு - திருத்தாண்டகம்.

திருசசிறறமபலம.

ஆரார்திரிபுரங்கணீறாநோககு மனலாடியாரமுதே யென்றேனானே, கூரார்மழுவாட் படையொன்றேந்திக் குறட்பூதபபல்படையானென்றேனானே, பேராயிரமுடையா யென்றேனானே பிறைசூடுமபிஞ்ஞகனே யென்றேனானே, யாராவமுதே யெனனையாறனே யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (க)

தீவாயின்முப்புரங்கணீறாநோக்குந் தீர்த்தா புராணனே யென்றேனானே, மூவாமதிசூடி யென்றேனானே முதல்வாமுக்கண்ணனே யென்றேனானே, யேவார்சிலையானே யென்றேனானே யிடும்பைககடனின்றுமேறவாங்கி, யாவாவென்றருள்புரியுமையாறனே யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (உ)

அஞ்சுண்ணவண்ணனே யென்றேனானே யடியார்கட்காரமுதே யென்றேனானே, நஞ்சணிகண்டனே யெனறேனானே நாவலர்களுண்மறையே யென்றேனானே நெஞ்சுணரவுள்புக்கிருந்தபோது நிறையுமமுதமே யென்றேனானே, யஞ்சாதேயரள்வானே யையாறனே யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௩)

தொல்லைத்தொடகடலேயென்றேனானே துலங்குமிளம்பிறையாயென்றேனானே, யெல்லைநிறைந்தானேயென்றேனானே யேழ்நரம்பினின்னிசையாயென்றேனானே, யல்லற்கடல்புக்கழுந்துவேனை வாங்கியரு

ள்செய்தாயென்றேனானே, யெல்லையாமையாறாவென்றேனானேயெ ன்றென்றேநானரற்றிநைகின்றேனே. (ச)

இண்டைச்சடைமுடியாயென்றேனானே யிருசுடர்வானத்தாயெ ன்றேனானே, தொண்டாற்றொழப்படுவாயென்றேனானே துருத்திநெய் த்தானத்தாயென்றேனானே, கண்டங்கறுத்தானேயென்றேனானே கன லாருங்கண்ணானேயென்றேனானே, யண்டத்துக்கப்பாலாமையாற னேயென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (ரு)

பற்றார்புரமெரித்தாயென்றேனானே பசுபதிபாண்டரங்காவென் றேனானே, கற்றார்கணாவினாயென்றேனானே கடுவிடையொன்றூர்தியா யென்றேனானே, பற்றானார்நெஞ்சுளாயென்றேனானே பார்த்தற்கருள் செய்தாயென்றேனானே, யற்றார்க்கருள்செய்யுமையாறனே யென்றெ ன்றேநானரற்றிநைகின்றேனே. (சு)

விண்ணோர்தலைவனே யென்றேனானே விளங்குமிளம்பிறையா யென்றேனானே, யெண்ணாரெயிலெரித்தா யென்றேனானே யேகம்ப மேயானே யென்றேனானே, பண்ணார்மறைபாடி யென்றேனானே ப சுபதீபாணீற்றாயென்றேனானே, யண்ணாவையாறனேயென்றேனானே யென்றென்றே நானரற்றி நைகின்றேனே. (எ)

அவனென்று நானுன்னையஞ்சாதேனை யல்லலறுப்பானேயென்றே னானே, சிவனென்றுநானுன்னை யெல்லாஞ்சொல்லச்செல்வந்தருவா னேயென்றேனானே, பவனாகியென்னுள்ளத் துள்ளேநின்று பண்டை வினையறுப்பா யென்றேனானே, யவனென்றேயாதியே யையாறனே யென்றென்றேநானரற்றி நைகின்றேனே. (அ)

கச்சியேகம்பனே யென்றேனானே கயிலாயாகாரோணா வென்றே னானே, நிச்சன்மணாளனே யென்றேனானே நினைப்பார்மனத்துளா யெ ன்றேனானே, யுச்சம்போதேறேறீ யென்றேனானே யுள்குவாருள்ளத் தாயென்றேனானே, யச்சமபிணிதீர்க்குமையாறனே யென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (கூ)

வில்லாடிவேடனே யென்றேனானே வெண்ணீறு மெய்க்கணிந் தாயென்றேனானே, சொல்லாயசூழலா யென்றேனானே சுலாவாய தொன்னெறியே யென்றேனானே, யெல்லாமாயென்னுயிரே யென்

றேனுனே யிலங்கையர்கோன் ரேளிறுத்தா யென்றேனுனே, யல்லா வினைதீர்க்குமையாறனே யென்றெனறே நானரற்றிநைகின்றேனே.()

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் ௩௭.

திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

1 ஓசையொலியெலாமானாய்நீயே யுலகுக்கொருவனாய் நின்றாய்நீயே வாசமலரெலாமானாய்நீயே மலையானமருகனாய நின்றாய்நீயே, பேசப் பெரிதுமினியாய்நீயே பிரானாடியென்மேல் வைத்தாய்நீயே, தேசவி ளக்கெலாமானாய்நீயே திருவையாறகலாத செம்பொற்சோதீ. (௧)

2 நோக்கரியதிருமேனி யுடையாய்நீயே நோவாமே நோக்கருளவல் லாய்நீயே, காப்பரியவைம்புலனுங்காத்தாய்நீயே காமனையுங்கண்ணழ லாற்காய்ந்தாய்நீயே, யார்ப்பரியமாநாக மார்த்தாய்நீயே யடியானென் றடியென்மேல்வைத்தாய்நீயே, தீர்ப்பரியவல்வினைநோய் தீர்ப்பாய்நீ யே திருவையாறகலாத செம்பொற்சோதீ. (௨)

4 கனத்தகத்துக் கடுஞ்சுடராய்நின்றாய்நீயே கடல்வரைவானாகாயமா னாய்நீயே, தனத்தகத்துத்தலைகலனாக் கொண்டாய்நீயே சார்ந்தாரைத் தகைந்தாளவல்லாய்நீயே, மனத்திருந்தகருத்தறிந்து முடிப்பாய்நீயே மல ரசேவடியென்மேல் வைத்தாய்நீயே, சினத்திருந்ததிருநீல கண்டனீ யே திருவையாறகலாத செம்பொற்சோதீ. (௩)

5 வானுற்றமாமலைகளானாய்நீயே வடகயிலைமன்னி யிருந்தாய்நீயே யூனுற்றவொளிமழுவாட் படையாய்நீயே யொளிமதியோடரவுபுனல் வைத்தாய்நீயே, ஆனுற்றவைந்துமமர்ந்தாய்நீயே யடியானென்றடி யென்மேல் வைத்தாய்நீயே, தேனுற்றசொன்மடவாள்பங்கனீயே திரு வையாறகலாதசெம்பொற்சோதீ. (௪)

6 பெண்ணாண் பிறப்பிலியாய் நின்றாய்நீயே பெரியார்கட்கெல்லாம் பெரியாய்நீயே, யுண்ணாவருநஞ்ச முண்டாய்நீயே யூழிமுதல்வனாய்நின் றாய்நீயே, கண்ணாயுலகெலாங்காத்தாய்நீயே கழற்சேவடி யென்மேல் வைத்தாய்நீயே, திண்ணார்மழுவாட்படையாய்நீயே திருவையாறகலா தசெம்பொற்சோதீ. (௫)

7 உற்றிருந்தவுணர்வெலாமானாய்நீயே யுற்றவர்க்கோர் சுற்றமாய் நின்றாய்நீயே, கற்றிருந்தகலைஞானமானாய்நீயே கற்றவர்க்கோர்கற்பக மாய்நின்றாய்நீயே, பெற்றிருந்ததாயவளின்நல்லாய்நீயே பிரானாடியெ

ன்மேல்வைத்தாய்நீயே, செற்றிருந்ததிருநீலகண்டனீயே திருவையாற
கலாதசெம்பொற்சோதீ. (௬)

எல்லாவுலகமுமானாய்நீயே யேகம்பமேவியிருந்தாய்நீயே, நல்லா
ரைநன்மையறிவாய்நீயே ஞானசசுடர் விளக்காய்நின்றாய்நீயே, பொல்
லாவினைகளறுப்பாய்நீயே புகழ்சசேவடி யென்மேல் வைத்தாய்நீயே,
செல்வாய செல்வநதருவாயநீயே திருவையாறகலாத செம்பொற
சோதீ. (எ)

ஆவினிலைந்துமமர்ந்தாய்நீயே யளவில்பெருமை யுடையாய்நீயே,
பூவினிறறமாயநின்றாய்நீயே போர்க்கோலங்கொண்டெயி லெய்தா
யநீயே, நாவினவுரையாய்நின்றாய்நீயே நண்ணியடியென்மேல் வைத
தாய்நீயே, தேவரறியாததேவனீயே திருவையாறகலாதசெம்பொற்
சோதீ. (அ)

எண்டிசைக்குமொண்சுடராயநின்றாய்நீயே யேகம்பமேயவிறைவ
னீயே, வண்டிசைக்கு நறுங்கொன்றைததாராயநீயே வாராவுலகருள
வல்லாயநீயே, தொண்டிசைத்துன்னடிபரவ நின்றாய்நீயே தூமலாச
சேவடியென்மேல்வைததாயநீயே, திணசிலைக்கோர்சரங்கூட்டவல்லா
யநீயே திருவையாறகலாதசெமபொற்சோதீ. (௯)

விண்டார்புரமூன்றுமெய்தாயநீயே விண்ணவர்க்குமேலாகிநின்றா
ய்நீயே, கண்டாரைககொல்லுநஞ்சுண்டாயநீயே காலனைககாலாற்கடந்தாய்நி
ன்றாய்நீயே, தொண்டாயடியேனை யாண்டாயநீயே தூமலாசசேவடி
யென்மேல் வைத்தாயநீயே, திண்டோள்விட்டெரியாடலுகந்தாயநீயே
திருவையாறகலாதசெமபொற்சோதீ. (௰)

ஆருமறியாவிடததாய்நீயே யாகாயந்தேரூரவல்லாய்நீயே, பேரும்
பெரியவிலங்கைவேந்தன் பெரியமுடிபததிறுததாயநீயே, யூரும்புரமூன்
றுமட்டாயநீயே யொண்டாமரையானுமாலுங்கூடித, தேருமடியென்
மேல்வைததாயநீயே திருவையாறகலாதசெமபொறசோதீ. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம் ௩௪.

திருமழபாடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நீறேறுதிருமேனியுடையான்கண்டாய் நெற்றிமேலொற்றைக்கண்
ணிறைந்தான்கண்டாய், கூறாகவுமைபாகங்கொண்டான் கண்டாய்
கொடியவிடமுண்டிருண்ட கண்டன்கண்டாய், யேறேறியெங்குந்திரி

வான்கண்டாயேழுலகு மேழ்மலையுமானான்கண்டாய, மாற்றானார்தம்ம ரணமட்டான்கண்டாய மழபாடிமன்னுமணாளன்றானே. (க)

24 கொக்கிறகுசென்னியுடையான்கண்டாய் கொல்லைவிடையேறுங் கூத்தன்கண்டா, யக்கரைமேலாடலுடையான்கண்டா யனலங்கையேந்தியவாதிகண்டா, யக்கொடரவமணிந்தான்கண்டா யடியார்கட்காரமுதமானான்கண்டாய், மற்றிருந்தகங்கைச சடையான்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (உ)

25 நெற்றித்தனிக்கணுடையான் கண்டாய நேரிழையோர் பாகமாய்நின்றான்கண்டாய், பற்றிப்பாம்பாட்டும் படிறன்கண்டாய பலவூர பலிதேர்பரமன்கண்டாய, செற்றார்புரமூன்றுஞ் செற்றான்கண்டாய செழுமாமதி சென்னிவைத்தான்கண்டாய், மறறொருகுற்றமிலாதான கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (ங)

26 அலையார்ந்த புனற்கங்கைச சடையான்கண்டா யண்டத்துக்கப் பாலாய் நின்றான்கண்டாய், கொலையானைகூற்றங் குமைத்தான்கண்டாய் கொல்வேங்கைத் தோலொன்றுடுத்தான்கண்டாய, சிலையாற்றிரிபுரங்கள் செற்றான்கண்டாய் செழுமாமதி சென்னிவைத்தான் கண்டாய், மலையார்மடந்தை மணாளன்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (ச)

27 உலந்தார்தமங்க மணிந்தான் கண்டா யுவகையோடின்னருள்கள் செய்தான்கண்டாய், நலந்திகழுங் கொன்றைச சடையான் கண்டாய் நால்வேதம் ஆறங்கமானான்கண்டா, யுலந்தார்தலைகலனாக் கொண்டா ன்கண்டா யும்பரார்தங்கள் பெருமான்கண்டாய், மலர்ந்தார்திருவடி யென்றலைமேல்வைத்த மழபாடி மன்னுமணாளன்றானே. (ரு)

28 தாமரையான்றன்றலையைச் சாய்த்தான்கண்டாய் தகவுடையார்நெஞ்சிருக்கை கொண்டான்கண்டாய், பூமலரானேத்தும் புனிதன்கண்டாய் புணர்ச்சிப்பொருளாகி நின்றான்கண்டா, யேமருவுவெஞ்சிலை யொன்றேந்திகண்டா யிருளார்ந்தகண்டத்திறைவன்கண்டாய், மாமருவுங்கலைகையிலேந்திகண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (சு)

29 நீராகிநெடுவரைகளானான்கண்டாய் நிழலாகிநீள்விசும்புமானான்கண்டாய், பாராகிப்பௌவமேழானான்கண்டாய் பகலாகிவானாகிநின்றான் கண்டா, யாரேனுந்தன்னடியார்க்கன்பன்கண்டா யணுவாகியாதியாய்நி

ன்றான்கண்டாய், வாரார்ந்தவனமுலையாள்பங்கன்கண்டாய் மழபாடி மன்னுமணாளன்றானே. (எ)

பொன்னியலுந்திருமேனி யுடையான்கண்டாய் பூங்கொன்றைத் தாரோன்றணிந்தான்கண்டாய், மின்னியலும்வார்சடையெம் பெருமான்கண்டாய் வேழத்தினுரிவிரும்பிப்போர்த்தான்கண்டாய், தன்னியல்பார்மற்றொருவரில்லான்கண்டாய் தாங்கரியசிவந்தானாய் நின்றான்கண்டாய், மன்னியமங்கையோர்கூறன்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (அ)

ஆலாலமுண்டுகந்தவாதிகண்டாயடையலார்தம்புரமூன்றுமெய்தான்கண்டாய், காலாலக்காலனையுங்காய்ந்தான்கண்டாய் கண்ணப்பர்க்கருள்செய்தகாளைகண்டாய், பாலாருமொழிமடவாள்பாகன்கண்டாய் பசுவேறிப்பலிதிரியும்பண்பன்கண்டாய், மாலாலுமறிவரியவெம்மான்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (௯)

ஒருசுடராயுலகேழு மானான்கண்டா யோங்காரத்துட்பொருளாய் நின்றான்கண்டாய், விரிசுடராய விளங்கொளியாய் நின்றான்கண்டாய் * விழவொலியும் வேளவொலியு மானான்கண்டாய், யிருசுடர்மீதோடா விலங்கைக்கோனை யீடழியவிருபதுதோளிறுத்தான்கண்டாய், மருசுடரின் மாணிக்கக்குன்றுகண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இது சோழநாட்டிலுள்ளது சுவாமிபெயர் வச்சிரத்தம்பேசுவரர். தேவியார். அழகாம்பிகையம்மை.

ஆகப்பதிகம் ௧௧.

---

திருமழபாடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

அலையடுத்தபெருங்கடனஞ்சமுதாவுண்டு அமரர்கடந்தலைகாத்த வையர்செம்பொற், சிலையெடுத்துமாநாகநெருப்புக்கோத்துத்திரிபுரங்க ளெரியிட்டசெல்வர்போலு, மிலையடுத்தபசும்பொனனூன் மூத்தாணீண்டுநிறைவயிரப்பலகையாற்குழையார்த்துற்ற, மலையடுத்தமழபாடிவயிரத் தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௧)

அறைகலந்தகுழன்மொழியாள்வீணையாழ மந்தரத்திற்கந்துவரம ரேத்த, முறைகலந்தமந்திரமு நீருங்கொண்டு வழிபட்டார்வானனைக் கொடுத்தியன்றே, கறைகலந்தபொழிற்கச்சிக்கம்பமேய கனவயிரத்திரடூணைகலிசூழ்மாட, மறைகலந்தமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௨)

---

* விழவொலியு விழவொலியுமெனச் சிலபிரதியிலிருக்கின்றது.

35 உரங்கெடுக்குமிருண்மெய்யர் மூர்க்கர்பொல்லா வூத்தைவாயச்சமணர்தமையுறவாககொண்ட, பரங்கெடுததிங்கடியேனையாண்டுகொண்டபவளத்தின்றிரடேனைபசும்பொன்முததே, புரங்கெடுதறுப்பொல்லாதகாமனுகம்பொடியாகவிழிததருளிப் புவியோர்க்கென்றும், வரங்கொடுக்குமழபாடிவயிரததூணே யென்றென்றேநானரற்றி நைகின்றேனே. (௫)

[illegible] உலனிகந்தூணுறிகையர்குண்டர்பொல்லா வூத்தைவாயசமணருறவாககொண்டு, ஞானகஞ்சேர்ந்துள்ளவயிரததைநண்ணு நாயேனைப்பொருளாகவாண்டுகொண்ட, மீனகஞ்சேர்வெள்ளநீர் விதியாற்சூடும் வேதனைவிண்ணவாதம்பெருமான்மேக, வானகஞ்சேர்மழபாடிவயிரததூணே யென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௬)

37 சிரமேற்றநான்முகன்றன்றலையுமற்றைத திருமால்தன்செழுந்தலையும்பொன்றசிந்தி, யுரமேற்றவிரவிபற்றகர்த்துசோம னொளிரகலைகளபடவுழக்கியுயிரைநல்கி, நரையேறறவிடையேறிநாகம்பூண்ட நம்பியையேமறைநான்குமோலமிட்டு, வரமேற்குமழபாடிவயிரததூணே யென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (௭)

38 சினந்திருத்துஞ்சிறுபெரியார்குண்டர்தங்கள் செதுமதியார் தீவினைக்கேவிழுந்தேன்றேடிப், புனந்திருத்தும்பொல்லாதபிண்டிபேணுமபொறியிலியேன்றனைப்பொருளாவாண்டுகொண்டு, தனந்திருததுமவர்திறத்தையொழியப்பாற்றித தயாமூலதன்மவழியெனக்குநல்கி, மனந்திருத்துமழபாடி வயிரத்தூணேயென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (௮)

39 அழித்துணையாம்பிறவிவழித் துக்கநீக்குஞ் சுருள்சடையெம்பெருமானேதூயதெண்ணீ, சிழிப்பரியபசுபாசப் பிறப்பைநீக்கு மென்றுனையே யென்னுடையபெம்மான்றம்மான், பழிப்பரியதிருமாலும்மயனுங்காணுப்பரிதியேசுருதிமுடிக்கணியாய்வாய்த்த, வழித்துணையாமழபாடிவயிரத்தூணேயென்றென்றே நானரற்றிநைகின்றேனே. (எ-அ ௬௦)

திருக்கேத்திரப்பதிகம்.

திருநெய்த்தானம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

வகையெலாமுடையாயுநீயேயென்றும் வான்கயிலைமேவினாய்நீயே யென்று, மிகையெலாமிக்காயு நீயேயென்றும் வெண்காடுமேவினாய் நீயேயென்றும், பகையெலாந்தீர்த்தாண்டாய்நீயேயென்றும் பாசூரமர்ந்தாயுநீயேயென்றுந், திகையெலாந்தொழச்செலவாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென் னெஞ்சுளாயே. (௧) 654

ஆர்த்தவெனக்கன்பனீயேயென்று மாதிக்கயிலாய னீயேயென்றுங், கூத்தநடமாடிநீயேயென்றுங் கோடிகாமேயகுழகாவென்றும், பார்த்தற்கருள் செய்தாய்நீயேயென்றும் பழையனூர் மேவியபண்பாவென்றுந், தீர்த்தன்சிவலோக னீயேயென்று நின்றநெய்த்தானா வென்னெஞ்சுளாயே. (௨) 664

அல்லாய்ப்பகலானாய நீயேயென்று மாதிக்கயிலாயனீயேயென்றுங், கல்லாலமர்ந்தாயு நீயேயென்றுங் காளத்திக்கற்பகமு நீயேயென்றுஞ், சொல்லாய்ப்பொருளானாய நீயேயென்றுஞ் சோற்றுத்துறையுறைவாய நீயேயென்றுஞ், செல்வாய்த்திருவானாய்நீயேயென்று நின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௩) 642

மின்னேரிடைபங்கனீயேயென்றும் வெண்காடுமேவினாய் நீயேயென்றும், பொன்னேர்சடைமுடியாய் நீயேயென்றும் பூதகணநாதனீயேயென்றும், என்னாவிரதத்தாய்நீயேயென்று மேகம்பத்தென்னீசனீயேயென்றுந் தென்னூரப்பதியுளாய்நீயேயென்று நின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (௪) 664

முந்தியிருந்தாயுநீயேயென்று முன்கயிலைமேவினாய நீயேயென்று நந்திக்கருள்செய்தாய நீயேயென்று நடமாடிநள்ளாற னீயேயென்றும் பந்திப்பரியாயு நீயேயென்றும் பைஞ்ஞீலிமேவினாய்நீயேயென்றுஞ், சிந்திப்பரியாயுநீயேயென்று நின்றநெய்த்தானா வென்னெஞ்சுளாயே. (௫) 664

தக்காரடியார்க்கு நீயேயென்றுந் தலையார்கயிலாயனீயேயென்று முக்காரம்பூண்டாயுநீயேயென்று மாகூரிறையானேயென்றும் நீயேயென்றும், புக்காயவேழுலகு நீயேயென்றும் புள்ளிருக்கும்வேளூராய் நீயேயென்றுந், தெக்காருமாகோணத் தானேயென்று நின்றநெய்த்தானா வென்னெஞ்சுளாயே. (௬) 664

புகழும்பெருமையாய் நீயேயென்றும் பூங்கயிலை மேவினாய் நீயேயென்று, மிகழுந்தலையேந்தி நீயேயென்று மிராமேச்சுரத்தின்பனீயே 664

யென்றும், அகழுமதிலுடையாய நீயேயென்று மாலவாய்மேவினாய் நீயேயென்றுந், திகழுமதிசூடிநீயேயென்று நின்றநெயததானுவென்னெஞ்சுளாயே. (எ)

வானவர்க்கு மூததிளையாய் நீயேயென்றும் வானக்கயிலாய னீயேயென்றுங், கானநடமாடிநீயேயென்றுங் கடவூரில் வீரட்டனீயேயென்று மூனூர்முடியறுத்தாய் நீயேயென்று மொற்றியூராரூரா நீயேயென்றுந், தேனுயமுதானுய நீயேயென்று நின்றநெயததானு வென்னெஞ்சுளாயே. (அ)

தந்தைதாயில்லாதாய் நீயேயென்றுந் தலையார்கயிலாய னீயேயென்று, மெந்தாயெம்பிரானுனாய் நீயேயென்று மேகம்பததென்னீசனீயேயென்று, முந்தியமுககணாய் நீயேயென்று மூவலூர்மேவினாய் நீயேயென்றுஞ், சிந்தையாய்தேனூராய நீயேயென்று நின்றநெய்த்தானு வென்னெஞ்சுளாயே. (கூ)

மறித்தான்வலிசெற்றாய் நீயேயென்றும் வான்கயிலைமேவினாய்நீயேயென்றும், வெறுத்தாரபிறப்பறுப்பாய் நீயேயென்றும் வீழிமிழலையாய்நீயேயென்றும், அறததாயமுதீந்தாய நீயேயென்றும் யாவர்கருந்தாங்கொணுநஞ்சமுண்டு, பொறுததாய புலனைந்துநீயேயென்று நின்றநெயததானுவென்னெஞ்சுளாயே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

ஆகப்பதிகம் - ௪௪.

திருநெயத்தானம் - திருத்தாண்டகம்.

திருசசிற்றமபலம.

மெயததானத்தகம்படியுளவர்நின்று வேண்டிற்றுக் குறைமுடிததுவினைக்குக்கூடாம், இத்தானததிருந்திங்ஙனுய்வானென்ணு மிதனையொழியியம்பக்கே ளேழைநெஞ்சே, மைததானநீணயனிபங்கன்வங்கம் வருதிரைநீர்நஞ்சுண்டகண்டன்மேய, நெய்த்தானமன்னகரென்றேததிநின்று நினையுமாநினைக்ககாலுய்யலாமே. (௧)

ஈண்டாவிரும்பிறவி துறவாவாக்கை யிதுநீங்கலாம் விதியுண்டென்றுசொல்ல, வேண்டாவேநெஞ்சமே விளம்பக்கேணீ விண்ணவர்தம் பெருமானார் மண்ணிலென்னை, யாண்டானன்றருவரையாற் புரமூன்றெய்த வம்மானையரியயனுங்காணுவண்ணம், நீண்டானுறைதுறை நெய்த்தானமென்று நினையுமா நினைக்ககாலுய்யலாமே. (௨)

பரவிப்பலப்பலவுந்தேடியோடிப் பாழாங்குரம்பை யிடைக்கிடந்து வாளா, குரவிகுடிவாழ்க்கை வாழவெண்ணிக் குலைகைதவிர்நெஞ்சே கூறக்கேணீ, யிரவிக்குலமுதலாவானோர்கூடி யெண்ணிறந்த கோடியமரராய, நிரவிக்கரியவனைத்தானமென்று நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (ங)

அலையார்வினைதிறஞ்சே ராக்கையுள்ளே யகப்பட்டுளாசையெனு ம்பாசத்தன்னுட், டலையாயகடையாகும வாழ்விலாழ்ந்து தளராதுநெஞ்சமேயஞ்சவேண்டா, விலையார்புனறகொன்றை யெறிநீர்த்திங்களிருஞ்சடைமேல்வைததுகந்தா னிமையோரேதது, நிலையாவுறைநிறைசெய்த்தானமென்று நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (ச)

இனைததனையோர்பொறையிலா வுயிர்போங்கூட்டைப்பொருளென்றுமிகவுன்னிமதியாலிந்த, வனைததுலகுமாளலாமென்றுபேசுமாங்காரந்தவிர்நெஞ்சேயமராககாக, முனைததுவருமதில்மூன்றும்பொன்றவன்று முடுகியவெஞ்சிலைவளைத்துசசெந்தீமூழ்க, நினைததபெருங்கருணையனையத்தானமென்று நினையுமாநினைந்தக்கா லுய்யலாமே. (ரு)

மிறைபடுமிவ்வுடலவாழ்வை மெய்யென்றெண்ணி வினையிலேகிடந்தழுந்தி வியவேனெஞ்சே, குறைவுடையாரமனத்துளான் குமரன்றாதை கூததாடுங்குணமுடையான் கொலைவேற்கையா, னறைகழலுந்திருவடிமேற்சிலம்புமார்ப்ப வவனிதலம்பெயரவரு நட்டநின்ற, நிறைவுடையானிடமாநெயததானமென்று நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (சா)

பேசப்பொருளலாப்பிறவிதன்னைப பெரிதென்றுசிறுமனத்தால் வேண்டியீண்டு, வாசக்குழன்மடவார் போகமென்னும் வலைப்பட்டுவீழாதே வருகநெஞ்சே, தூசக்கரியுரித்தான்றூநீறாடித் துதைந்திலங்குநூன்மார்பன்றொடர்கில்லா, நீசர்க்கரியவனைத்தா... நினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (எ)

அஞ்சப்புலனிவற்று லாட்டவாட்டுண் டருநோய்க்கிடமாயவுடலின்றன்மை, தஞ்சமெனக்கருதிததாழ்நெஞ்சே தாழக்கருதுதியேதன்னைக்கோர, வஞ்சமனத்தவர்கள் காணவொண்ணா மணிகண்டன்வானவர்தம்பிரானென்றேத்து, நெஞ்சர்க்கினியவனைத்தானமென்று நினையுமா நினைந்தக்காலுய்யலாமே. (அ)

பொருந்தாதவுடலகத்திற் புக்கவாவி போமாறறிந்தறிந்தேபுலைவா ழ்வுன்னி, யிருந்தாங்கிடர்ப்படநீவேண்டாநெஞ்சே யிமையவர்தம்பெ ருமானன்றுமையாளஞ்சக, கருந்தாண்மதகரியை வெருவசசீறுங் கண் ணுதல்கண்டமராடிக கருதார்வேள்வி, நிரந்தரமாவினிதுறைநெய்த தானமென்று நினையுமாநினைந்தககாலுயயலாமே. (௯)

உரிததன்றுனக்கிவ்வுடலின்றன்மை யுண்மையுரைத்தேன் விரத மெல்லாந், தரிததுந்தவமுயன்றும வாளாநெஞ்சே தம்மிடையிலில்லா ர்ககொன்றல்லாக்கனன, வெரிததானனலுடையா னெண்டோளானே யெம்பெருமானென்றேதா விலஙகைககோனை, நெரிததானைநெய த்தானமேவினானை நினையுமாநினைந்தககாலுயயலாமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

ஆகப்பதிகம். — ௬௨,

திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

நில்லாதநீர்சடைமேனிறபிததானை நினையாவென்னெஞ்சை நினை வித்தானைக், கல்லாதனவெலலாஙகறபிததானைக காணாதனவெல்லாங காட்டினானைச, சொலலாதனவெலலாஞ்சொலலியெனனைத தொடா ந்திஙகடியேனையாளாககொணடு, பொலலாவெனனோய்தீாததபுனிதன றன்னைப் புண்ணியனைப் பூநதுருததிககண்டேனானே. (௧)

குற்றாலஙகோகரணமேவினானைக் கொடுஙகைக்கடுங்கூற்றைப பாய்ந்தான்றன்னை, யுறறாலநஞசுண்டொடுக்கினானை யுணராவெ னெஞ்சையுணர்விததானைப, பறறாலின்கீழங்கிருநதான்றன்னைப்பண் ணார்ந்தவீணைபயின்றான்றன்னைப, புற்றாடரவார்த்தபுனிதன்றன்னைப புண்ணியனைப்பூந்துருததிக்கண்டேனானே. (௨)

எனக்கென்றுமினியானை யெமமான்றன்னை யெழிலாருமேகம்ப மேயான்றன்னை, மனக்கென்றும்வருவானைவஞ்சர்நெஞ்சி னில்லானை நின்றியூர்மேயான்றன்னைத், தனககென்றுமடியேனையாளாக்கொண்ட சங்கரனைச்சங்கவார்குழையான்றன்னைப், புனக்கொன்றைத் தாரணி ந்தபுனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௩)

வெறியார்மலர்க்கொன்றை சூடினானை வெள்ளானைவந்திறைஞ்சு ம்வெண்காட்டானை, யறியாதடியேனகப்பட்டேனை யல்லற்கடனின்று மேறவாங்கி, நெறிதானிதுவென்றுகாட்டினானைநிச்சனலிபிணிக டீர்ப்

பான்றன்னைப், பொறியாடரவார்த்த புனிதன்றன்னைப் பொய்யிலி
யைப்பூந்துருத்திக்கண்டேனே. (௪)

மிக்கானை வெண்ணீறு சண்ணித்தானை விண்டார்புரமூன்றும்
வெவ்வநோக்கி, நக்கானைநான்மறைகள்பாடினானை நல்லார்கள்பேணிப்
பரவநின்ற, தக்கானைத்தண்டாமரைமேலண்ணறலை கொண்டுமாத்தி
ரைக்கணுலகமெல்லாம், புக்கானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்
பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (ரு)

ஆர்த்தானைவாசுகியையரைக்கோர்க்கச்சா வசைத்தானை யழகாய
பொன்னார்மேனிப், பூத்தானத்தான்முடியைப் பொருந்தாவண்ணம்
புணர்ந்தானைப்பூங்கணையானுடலம்வேவப், பார்த்தானைப்பரிந்தானைப்
பனிநீர்க்கங்கை படர்சடைமேற்பயின்றானைப் பதைப்பயானை, போர்
த்தானைப்புண்ணியனைப் புனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்
திக்கண்டேனே. (சு)

எரித்தானையெண்ணார் புரங்கண்மூன்று மிமைப்பளவிற்பொடி
யாகவெழிலார்கையா, லுரித்தானைமதகரியையுற்றுப்பற்றி யுமையதனைக்
கண்டஞ்சி நடுங்கக்கண்டு, சிரித்தானைச்சீரார்ந்தபூதஞ்சூழத் திருச்
சடைமேற்றிங்களும்பாம்புநீரும், புரித்தானைப் புண்ணியனைப்புனிதன்
றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (எ)

வைத்தானைவானோருலகமெல்லாம் வானிறைஞ்சி மலர்கொண்டு
நின்றுபோற்றும், வித்தானைவேண்டிற்றொன் றீவான்றன்னை விண்ண
வர்தம்பெருமானை வினைகள்போக, வுய்த்தானையொலிகங்கை சடை
மேற்றங்கி யொளித்தானையொருபாகத் துமையோடாங்கே, பொய்த்
தானைப்புண்ணியனைப் புனிதன்றன்னைப் பொய்யிலியைப் பூந்துருத்
திக்கண்டேனே. (அ)

ஆண்டானைவானோருலகமெல்லா மந்நாளறியாத்தக்கன்வேள்வி
மீண்டானைவிண்ணவர்களோடுங்கூடி விரைமலர்மேன்னான்முகனுமா
லுந்தேர, நீண்டானைநெருப்புருவமானான்றன்னை நிலையிலார்மும்மதிலும்
வேவவில்லைப், பூண்டானைப்புண்ணியனைப் புனிதன்றன்னைப் பொ
ய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (கூ)

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னை மணிமுடியோடிருப
துதோணெரியக்காலா, லிறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையெ
ண்டிசைக்குங்கண்ணானான் சிரமேலொன்றை, யறுத்தானையமரர்களுக்

கழுதிந்தானை | யாவர்கருந்தாங்கொணு நஞ்சமுண்டு, பொறுத்தானைப் புண்ணியனைப்புனிதனறனைப் பொய்யிலியைப் பூந்துருத்திக் கணடேனானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

ஆசப்பதிகம் - சக.

திருச்சோற்றுத்துறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்.

மூத்தவனாயுலகுக்குமுந்தினானே முறைமையாலெல்லாம் படைக்கின்றானே, யேத்தவனாயேழுலகுமாயினானே யின்பனாயத்துன்பங் களைகின்றானே, காத்தவனாயெல்லாந்தான்காண்கின்றானே கடுவினையேனுடைய தீவினையைக் கண்டுபோகத், தீர்த்தவனேதிருச்சோற்றுத் துறையுளானே திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௧)

தலையவனாயுலகுக்கோர்தன்மையானே தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமுதானானே, நிலையவனாய்நின்னொப்பாரில்லாதானே நின்றுணராக்கூற்றத்தைச் சீறிப்பாய்ந்த, கொலையவனே கொல்யானைத் தோல் மேலிட்ட கூற்றுவனேகொடிமதில்கண் மூன்றுமெய்த, சிலையவனே திருச்சோற்றுத் துறையுளானேதிகழொளியே சிவனேயுன்னபயநானே.

முற்றாதபான்மதியஞ்சூடினானே முளைத்தெழுந்தகற்பகத்தின் கொழுந்தொப்பானே, யுற்றாரென்றொருவரையு மில்லாதானே யுலகோம்புமொண்சுடரே யோதும்வேதங், கற்றானேயெல்லாக்கலைஞானமுங் கல்லாதேன் றீவினைநோய்கண்டுபோகச், செற்றானே திருச்சோற்றுத் துறையுளானே திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௩)

கண்ணவனா யுலகெல்லாங்காக்கின்றானே காலங்களூழி கண்டிருக்கின்றானே, விண்ணவனாய் விண்ணவர்க்கு மருள்செய்வானே வேதனாய்வேதம் விரித்திட்டானே, யெண்ணவனே யெண்ணார் புரங்கண் மூன்று மிமையாமுன்னெரிகொளுவ நோக்கிநக்க, திண்ணவனேதிருச்சோற்றுத் துறையுளானே திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௪)

நம்பனேநான்மறைகளாயினானே நடமாடவல்லானே ஞானக்கூத்தா, கம்பனேகச்சிமாநகருளானே கடிமதில்கண் மூன்றினையும் பொடியாவெய்த, அம்பனேயளவிலாப் பெருமையானே யடியார்கட்காரமுதே யானேறேறுஞ், செம்பொனே திருச்சோற்றுத் துறையுளானே திகழொளியே சிவனேயுன்னபயநானே. (௫)

